# சாணக்கியன்

அல்லது

# 'புத்திமானே பலவான்'

தமிழ்ப்பண்டிதர்

திரு. எம். சக்கரவர்த்தி நாயனுர்

இயற்றியது

பதிப்பாளர் :

டீசர்ஸ் பப்ளிஷிங் ஹௌஸ்,

200, தம்பு செட்டித் தெரு,

சென்னை.

1928 [விலை அணு எட்டு

# சாணக்கியன்

அல்லது

# 'புத்திமானே பலவான்'

தமிழ்ப்பண்டிதர்

திரு. எம். சக்கரவர்த்தி நாயனுர்

இயற்றியது






பதிப்பாளர் :

டீசர்ஸ் பப்ளிஷிங் ஹௌஸ்,

200, தம்பு செட்டித் தெரு,

சென்னை.

பதிப்புரிமை]   1928   [விலை அணு எட்டு

# சாணக்கியன்

## அல்லது

# புத்திமானே பலவான்

## அத்தியாயம் 1

### மக்கட்பேறு

திருவளர்ந்தோங்கிய இப்பாரதகண்டத்தில் பூர்வம் எல்லா வளங்களும் நிறைந்து எழில்பெற்று விளங்கியது மகதநாடு. அந்நாட்டின்கண் பாடலிபுத்திரம் என்பதோர் அணிநகர் உண்டு. அத் திருநகரினையே அரசிருக்கையாகக் கொண்டு, சந்திரவமிசத்தில் உதித்த சர்வார்த்த சித்தியென்னும்நாமவேலரசன் அந்நாட்டை அறநீதி வழுவாது ஆட்சிபுரிந்து வந்தான். அவ்வரசனுக்குச் சகல கலைகளிலும் வல்லவனாய் விளங்கிய இராக்ஷஸன் என்பவன் மந்திரியாக அமர்ந்திருந்தான். அம்மந்திரி, மதிவல்லவனாயிருந்ததோடு, தனது அரசன் மீதும் மிக்க விசுவாசமுடையவனாயிருந்தான். அதனால், அரசன், அரசாங்க சம்பந்தமான சகல பொறுப்புக்களையும் அமைச்சனிடம் ஒப்புவித்துத் தனது அகத்தைக் களிப்பிக்கிறவர்களாகிய அரசகுலமாது சுநந்தாதேவியுடனும், அழகில் அணங்கையும் பழிக்கும் பேரழகுவாய்ந்த முராதேவி என்னும் சூத்திரகுல மாதரசியுடனும் கூடி இல்லறத்தில் இன்பவாழ்வைப் பெற்று உவந்தனன்.

அரசன் சகல பாக்கியங்களையும் பெற்றிருந்தானேனும், கறையுடைய சந்திரனைப் போன்று புத்திரப்பேறில்லா ஒரு குறையைக் களங்கமாக அடைந்திருந்தான். அக்குறையோ

அவன் மனத்தை எப்பொழுதும் துன்புறுத்தி வந்தது. அவன், ஒவ்வோரமயம், "நான் மனிதரில் உயர்ந்த செல்வத்தையும் பதவியையும் பெற்றிருந்தும், யாது பயன்? இவையெல்லாம் மக்கட் செல்வத்திற்கு ஈடல்லவே. பெரியோர்களும், 'பெறும் பேறுகளுள் மக்கட் பேற்றினைப் போல மாண்புடைய பேறு வேறு இல்லை' என்றன்றோ கூறுகின்றனர். 'புத்' என்னும் நரகத்திலிருந்து மீட்பவர் புத்திரரல்லவோ? புத்திரரில்லாப் பிறப்புப் புண்ணியமில்லாப் பிறப்பு என்பது உண்மையே.

'படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
யிட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்ந்து
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே'"

என்றெண்ணி வருந்துவான்.

இங்ஙனம் அவன் மக்கட் செல்வத்தைக் குறித்து வருந்துகின்ற காலத்து, ஐம்புலனைச் சுட்டறுத்த அருந்தவ முனிவர் ஒருவர் அவன் அரண்மனைக் கெழுந்தருளினர். அரையன் அம்முனிவரைக் கண்டதும், ஆவினைக் கண்ட இளங்கன்றென எதிர் சென்று வணங்கி, முகமன்கூறி, அவரை ஆடகச்செம்பொன் ஆசனத்திருத்திப் பூசனை புரிந்து, அவர் திருவடிகளைக் கழுவிய புனித நீரைத் தன் சிரசிலும், தனது மனைவியர் இருவரது தலையிலும் தெளித்தனன். அங்ஙனம் தெளித்த அப்புனித நீரானது, சுநந்தாதேவியின் சிரசில் ஒன்பது துளிகளாகவும், முராதேவியின் சிரசில் ஒரு துளியாகவும் நின்றது. அப்பொழுது சுநந்தாதேவி பட்டத்தரசி என்ற செல்வ இறுமாப்புக் கொண்டும், முராதேவி முக்குறும் பெறிந்த முனிவரை வணங்கும் பாக்கியம் பெற்றோம் என்ற

ஆர்வமும் விநயமுங் கொண்டும் நின்றார்கள். முனிவர் பெரு மானும், அவரவர்களது பக்திக் கிணங்கக் கிருபைபாலித்து ஆசீர்வசனங் கூறித் தான் கருதி வந்த காரணத்தை அரச னிடம் மொழிந்து தன் இருக்கைக்குச் சென்றருளினர்.

அம் முனிவர் சென்ற சில காலத்திற்குப் பின்பு முரா தேவி வயிறு வாய்த்தனள். அரசன் அதுகண்டு ஆனந்தங் கொண்டு பண்டு எழுந்தருளிய முனிவர் பெருமானை வழிபட் டதின் பலன்போலு மென்றெண்ணி அப்பெருமானை அல்லும் பகலும் அநவரதமும் துதித்து வாழ்த்தினன். அரசன் அங்ங னம் மகிழ்வுறுங் காலத்து, முராதேவி திங்கள் பத்துங் கடந்து திங்களை யொப்ப ஒரு நற்சேயைப் பெற்றெடுத்தாள். மன்ன னும் அப்புத்திரனைக் கண்டு மனமகிழ்ந்தான்.

முராதேவி வயிற்றிலுதித்த அப்புத்திரன், ஐவகைத் தாயரால் நன்கு போஷிக்கப்பெற்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தான். அரசன் அப் புத்திரனுக்கு மௌரியன் என்னும் நாமஞ் சூட்டி, வித்தியாப் பியாசத்திற்குரிய பருவம் வந்ததும், நல்லாசிரியர்பால் சேர்ப் பித்து, யானை ஏற்றம், குதிரை ஏற்றம், அஸ்திர சஸ்திரப் பிரயோகம் முதலிய வித்தைகளையும், பல நீதி சாஸ்திரங்களை யும் முறையாகக் கற்பித்துவைத்தான். அப்புத்திரனும் மிக்க சிரத்தையுடன் சகல வித்தைகளையுங் கற்று, பக்தியிலும் சக்தி யிலும் தனக்கு ஒப்பாரு மிக்காருமின்றிச் சிறந்து விளங்கி னான்.

அரசன், முராதேவி வயிற்றிலுதித்த மௌரிய புத்திர னைக் கண்டு மகிழ்ந்தனனேனும், பட்டத்தரசியாய் விளங்கும் சுநந்தாதேவியின் வயிற்றில் புத்திரன் பிறக்கவில்லையே யென்ற கவலை பெரிதுங் கொண்டான். அவளும் சின்னாட் கழித்துக் கருப்பமுற்று ஐயிருதிங்கள் கடந்து ஒரு மாமிச பிண்டத்தைப் பெற்றெடுத்தாள். அதுகண்டு அரசனும்

மந்திரி முதலாயினோரும் கவலைகொண்டு துக்க சாகரத்தில் மூழ்கியிருந்த காலத்து, ஆகாயத்தில் அசரீரியாக ஒரு குரல் "காவலனே! கவலை கொள்ளற்க; உனக்கு இம் மாமிசபிண்டத்தினின்றும் ஒன்பது புத்திரர்கள் பிறப்பார்கள்" என்றது.

அரசன் அவ்வசரீரிமொழி கேட்டும் மாமிசபிண்டத்தைக் குறித்தே மனக்கவலை கொள்ளலானான். அப்பொழுது மந்திரி மன்னனை நோக்கி, "மன்ன! கவலை கொள்ளவேண்டாம். அசரீரி வாக்கு ஒரு நாளும் பொய்க்காது. அது கூறியபடி' நாம் இம் மாமிசபிண்டத்தை ஒன்பது கூறாக்கி, ஒவ்வொன்றையும் ஒவ்வொரு தைலக்குடத்திலிட்டுப் பார்ப்போம். இங்ஙனமே துரியோதனனாதியர் பிறந்திருக்கின்றார்கள்" என்று தேறுதலான சில வசனங்கள் கூறி, சுநந்தாதேவியின் வயிற்றினுதித்த மாமிசபிண்டத்தை ஒன்பது கூறாக்கி, அவற்றைத் தைலக் குடங்களிலிட்டுப் பாதுகாத்து வந்தனன்.

அவ்வாறு செய்த சின்னாட்களுக்குப் பின், ஒன்பது தைலக் குடங்களையும் பிளந்துகொண்டு ஒன்பது புத்திரர்கள் ஏக காலத்தில் வெளித் தோன்றினார்கள். அரசன், அப்புத்திரர்களைக் கண்டு அகமகிழ்வு கொண்டு, அமைச்சனது அரிய புத்தியை மிக வியந்தனன்.

அதன்பின் அப்புத்திரர்களுக்கு ஜாதகர்மஞ் செய்து **நவநந்தகுமாரர்கள்** என்று நாமமிட்டு, அவர்கள் கல்வி பயில்வதற்குரிய காலம் வந்ததும், அவர்களை நல்லாசிரியரிடஞ் சேர்ப்பித்து, அரசமக்களுக்குரிய நீதி சாஸ்திரம், தநுர் வித்தை முதலியவைகளைப் பயிற்றுவித்தனன்.

அக்குமாரர்களும் கலை பல பயின்று அரச பதவிக்குரிய பிராயத்தையடைந்தார்கள். அரசன், குமாரர்கள் பதினமரும் வாலிபதசை யடைந்திருப்பதை நோக்கி, அவர்களுக்குத் தத்தம் மனத்திற்கிசைந்த பெண்களை மணஞ்செய்வித்து, அவர்களது இல்லற வாழ்க்கையைக் கண்டு மனமகிழ்ந்தனன்.

## அத்தியாயம் 2

### சர்வார்த்த சித்தியும் அவன் புத்திரர்களும்

பிள்ளைகள் இங்ஙனம் அரசபதவிக்குரிய பருவத்தை எய்தியதும், சர்வார்த்தசித்தி, ஒருநாள், தன் குமாரர் பதின்மரையும் மற்றுமுள்ள மந்திரி பிரதானியரையும் அழைத்து, மந்திரியை நோக்கி, "மதிவல்லப! நான் இந்த ராஜ்யபாரத்தை என் மக்களில் ஒருவனிடம் ஒப்புவித்து விட்டு மன நிம்மதி கொள்ள எண்ணியுள்ளேன். இவர்களுக்குள் எவனை அரசனாக நியமிக்கலாம். நீ ஆலோசித்துச் சொல். நான் மௌரியனை மாத்திரம் சேனாதிபதியாக இருக்க நியமித்துள்ளேன்" என்றனன்.

மௌரியன், அதுகேட்டுத் தனக்குள் 'என்னே என் பிதாவின் வஞ்சனை! அரச குமாரர் பதின்மருள்ளும் நானே மூத்தவனென்பதையும், இவ்வரச பதவிக்கு நியாயமாக நானே உரித்தானவனென்பதையும் சிறிதும் நினைத்திலரே. இராஜ்ய முழுவதையும் எனக்குக் கொடுக்க மனமில்லையேனும், சிறிதுபாகமாவது கொடுத்திருக்கலாம். அதையும் விடுத்துச் சாதாரண மனிதர்களுக்குக் கொடுக்கும் இந்தச் சேனாதிபதிப் பதவியை எனக்குக் கொடுத்திருக்கின்றார். இருக்கட்டும், இவ்வரச பதவிக்கென்று ஏற்பட்டிருக்கும் நவநந்தர்களுக்குள் கலகம் விளைவித்து அப்பதவியை அவர்களுள் எவரும் அடையாவண்ணம் செய்கிறேன்' என்று எண்ணி முடிவு செய்து கொண்டு, அரசனைப் பார்த்து, 'தந்தையே! நீர் எதற்காக ஆலோசிக்கவேண்டும்! நந்தர்கள் ஒன்பதின்மருள் ஒருவனை அரசனாக்கி, மற்றவர்களை அவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்து உதவிபுரிய நியமிக்கிறதுதானே" என்றனன்.

அரசன் அதற்குச் சம்மதியாது வேறுவிதம் யாது செய்

வதென்று சிந்திக்கும்பொழுது, நவநந்தர்களுள் வக்கிரநந்தி என்பவன் பிதாவைப் பார்த்து, "அன்புள்ள தந்தையே! இந்த இராஜ்யத்தையும் இதிலுள்ள நாற்படையையும் ஒன்பது பாக மாக்கி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாகத்தைக் கொடுத் தல் நலமல்லவோ'' என்றனன். அப்பொழுது மௌரியன் அரசனைப் பார்த்து, 'இந்த இராஜ்யத்தை வக்கிரநந்தி கூறிய படி ஒன்பதுபாகமாக வகுத்து ஒவ்வொரு பாகத்தையும் ஒவ்வொருவனுக்குக் கொடுத்தால், பழமையானதும் பெரு மைபெற்றதுமான இப்பாடலிபுத்திர நகரை எவருக்குக் கொடுப்பது ?'' என்றனன்.

அப்பொழுது, சகல சாஸ்திரங்களையும் ஐயந்திரிபறக் கற்று விளங்கும் மதிவல்லபனாகிய மந்திரி இராக்ஷஸன் என் பான், தன் மனத்திற்குள் 'இந்த மௌரியன், நவநந்தர்களுக்கு மாற்றாந்தாய் வயிற்றிலுதித்த சகோதரனாயிருந்தும், அவர்க ளிடத்து அதிக விசுவாச முள்ளவன்போல் நடித்து அவர்க ளுக்குள் கலகத்தை விளைவிக்கக்கூடிய வார்த்தைகளை அவர் களுக்காகப் பரிந்து பேசுவதுபோல் பேசுகின்றான். அவன் பேசும் வார்த்தைகளில் மறைந்துள்ள தந்திரம் எவரும் அறியக்கூடாம லிருக்கின்றது. ஆயினும் அதை நான் அறி வேன். அவன் தந்திரம் எவ்வளவு பலிக்கிறது பார்ப்போம். நான் உயிரோடிருக்கிறவரையில் அவன் தந்திரமொன்றும் பலியாது?' என்று சிந்தித்துக்கொண்டு, நவநந்தர்களைப் பார்த்து "அரசகுமாரர்களே! உங்களுக்கு நான் ஒரு வார்த்தை சொல்லுகிறேன். நீங்கள் யாவரும் அதனைக் கேட்டு அதன்படி நடந்தால் உங்களுக்கு நலமுண்டாகும். இப்பாடலிபுத்திரத்தைப்போல் இன்னும் வேறே எட்டு நகரங்களை அமைத்து, பொதுவாயிருக்கும் சகல சொத்துக் களையும் யானை குதிரைகளையும் சதுரங்க சேனைகளையும் ஒன் பது பாகங்களாக வகுத்து, அவ்வொன்பது பாகங்களையும்

தனித்தனி ஒன்பது சீட்டிற் குறித்து எழுதி மடித்து அவற்றை ஒரு பொதுவிடத்தில் வைக்கின்றேன். நீங்கள் ஒவ்வொருவரும் சென்று தங்களுக் கிஷ்டமான சீட்டு ஒன்றினை எடுத்துக் கொள்ளுங்கள். அச்சீட்டில் எந்தப் பாகம் குறிக்கப் பெற்றிருக்கின்றதோ அந்தப் பாகத்தை அவரவர்கள் அடையுங்கள்'' என்றனன்.

மந்திரி இங்ஙனம் புகன்றதும், மௌரியன் மந்திரியை நோக்கி, "அமைச்சரே! தாங்கள் தனியே நியமிக்கும் எட்டு நகரங்களிலும், இப்பாடலிபுத்திரத்திலுள்ள அதிசுந்தரமான நந்தவனங்களையும் பொய்கைகளையும் அமைத்தல் கூடுமோ?" என்றனன். அப்பொழுது, அரசகுமாரர்கள் ஒவ்வொருவரும் மௌரியனை நோக்கி, 'நீர் ஏன் அவருடன் வீணே வாதம் புரிகின்றீர்? இப் பாடலிபுத்திரத்தை எனக்குக் கொடுக்காவிட்டால் நான் இந்நாட்டிலிரேன். காட்டிற்குத் தான் செல்வேன்'' என்று பிடிவாதமாகச் சொல்லத் தொடங்கினர்.

மௌரியன், அங்ஙனம் கூறும் நவநந்தர்களைப் பார்த்து, "சகோதரர்களே! நீங்கள் இவ்விதம் கூறுவதை விட்டு எல்லோரும் ஒருமிக்கச் சேர்ந்து இந்நாட்டினைப் பங்கிடாமல் ஆளுதல் கூடாதோ?" என்றனன். அரசன், "அது எப்படிச் சரிப்படும். அரசாளும் அவா எல்லாருக்கும் இருக்கிறது. ஆதலால், ஒவ்வொருவரும் ஒவ்வொரு முறை போட்டுக்கொண்டு அம்முறையில் ஒவ்வொருவனும் அரசனாக இருந்து இந்த நாட்டைப் பரிபாலிக்கட்டும். அப்படிச் செய்வதால் ஒவ்வொருவனும் அரசபதவியை வகிக்கின்றான். அதனால் யாருக்கும் ஏற்றத் தாழ்வில்லை. அதுவே சிறந்த முறை. அதைத் தட்டினால் முடிவில் கலகந்தான் உண்டாகும்'' என்று தன் தீர்மானத்தைத் தெரிவித்தனன்.

மௌரியன், அது கேட்டுத் தந்தையைப் பார்த்து, "பிதாவே! தாங்கள் கூறும் தீர்மானப்படி ஒத்துக்கொண்

டால் எவன் முதலில் அரசனுவது?" என்றனன். அப்பொழுது நவநந்தர்கள் ஒன்பதின்மரில் ஒவ்வொருவனும், "நான் தான் முதலில் அரசனுவேன்! நான்தான் முதலில் அரசனுவேன்!" என்று கூறத்தலைப்பட்டான்.

இதைக் கண்ட அமைச்சன் அவர்களைப் பார்த்து, "நந்தகுமாரர்களே! நீங்கள் இவ்விதம் கலகம் விளைத்து ஒரு விதத்திற்குஞ் சம்மதப் படாமலிருப்பது இவ்வளவும் நன்மையாகாது. இப்படி நீங்கள் மாறுபட்டுரைப்பது நமது நாட்டில் மாற்றாருக்கு மணிகோலிக் கொடுப்பதற்கு ஏதுவாகும். பூசிக்கத் தகுந்த தந்தைமொழியைத் தட்டாதீர்கள். 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்பதை மனத்திலிருத்துங்கள். அவர் கூறிய முறைப்படி நீங்கள் இந்நாட்டை ஆண்டுவாருங்கள். உங்களுக்குச் செல்வமும் புகழும் மிகப் பெருகும்" என்று பல சமாதான வார்த்தைகள் கூறி அவர்களுள் ஒற்றுமை உண்டாக்கினன்.

அவர்களும், தந்தை மொழியே தகுதியெனக் கொண்டு, மாண்புடைய மகதநாட்டில் மனுநீதி வழுவாது செங்கோலோச்சி வர உடன்பட்டனர். அதன்பின் அரசன், நவநந்தர்கள் ஒன்பதின்மருக்கும் இராஜ்யபட்டாபிஷேகம் செய்வித்து, அவர்கள் ஆளுகைக்கு 'நவநாயக'மென நாமஞ்சூட்டி, தான் தவம்மேற்கொள்ள அடவியை யடையப் புறப்பட்டனன். அப்பொழுது, அந்நகரிலுள்ள பிரபுக்களும், மற்ற குடிகளும், அரசன் அடவி போகாமலிருந்து, சிறிதுகாலம் அரச மக்களுக்குதவியாய் அவர்கள் பரிபாலனத்தைக் கண்காணித்து வர வேண்டிக்கொண்டனர். அரசனும், அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி, அடவி செல்லும் பிரயாணத்தை நிறுத்தி, புத்திரர்கள் நாடாளுந் திறத்தைக் கண்டு மகிழ்ந்திருந்தனன்.

---

## அத்தியாயம் 3

### மௌரியர் வதம்

இங்ஙனம் பிதாவின் ஆஞ்ஞைப்படி நவநந்தர்கள் ஆண்டுக்கொருவராய் அந்நாட்டினை ஆண்டு வந்தனர். அந்நவநாயக ஆட்சிக்கு இராக்ஷஸன் என்னும் மதியுள்ள மந்திரி உறுதுணையாயிருந்து நந்தர்களுக்குள் பேதபுத்தி ஏற்படாதபடியும், நாட்டின் செல்வம் நாளுக்குநாள் பெருகும்படியும், பகைவர் தலையெடுக்காதபடி அவர்களை அடக்கியும் நன்மை புரிந்துவந்தான். மௌரியனும் அவ்வாட்சியின்கீழ்ச் சேனாதிபதியாக இருந்து அவர்களுக்குப் பல விதத்திலும் உதவியே செய்து வந்தான்.

சின்னாட்களுக்குப் பின்பு மௌரியனுக்கு அவனது பல மனைவிகளிடம் நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களை மௌரியன் கற்றுத் துறைபோய ஆசிரியர்பால் சேர்த்து அவர்களுக்கு அஸ்திர சஸ்திரப் பிரயோகங்களையும், ஆனை குதிரை முதலிய வாகனங்களின் மீது ஆண்மையுடன் ஏறும் திறமையையும் பயிற்றிவைத்ததோடு, பண்டிதர்களையும் வெல்லக்கூடிய பாஷா ஞானத்தையும் புகட்டி வைத்தான். அப்புத்திரர்களும், சகல சாஸ்திர சம்பன்னர்களாகி யாவரும் விரும்பக்கூடிய நல்லொழுக்கத்தில் மேம்பட்டு விளங்கினார்கள். அவர்களில் கடைசி சகோதரனான சந்திரகுப்தனென்பான் கல்வியிலும் சாமர்த்தியத்திலும் அரச தந்திரத்திலும் மிகவும் சிறந்து விளங்கினான்.

அதி விவேக சாலிகளாய் விளங்கிய அந்நூறு புத்திரர்களும், தந்தைமீது மிக்க பிரியமுடையவர்களாயும், தந்தை சொல் தட்டாத நல்ல தநயர்களாயும் நடந்துகொண்டார்கள். அதனால் மௌரியனுக்கு மிகுந்த மகிழ்ச்சியும் சிறந்த கீர்த்தியும் உண்டாயின. இஃதன்றியும், அந்நாட்டின் குடி மக்கள்

ஆண்டுக்கொரு அரசராக வரும் நவநந்தர்களைவிட, எப்பொழுதும் சாசுவத பதவியாகிய சேனாதிபதி பதவியை வகித்து வரும் மௌரியனிடமே அதிக பிரியமும் பக்தியும் செலுத்தி வந்தார்கள். இதனாலும் அம் மௌரியனுக்கு மிகுந்த செல்வாக்குண்டாயிற்று. மௌரியன் அரச பதவியை வகித்திலனேனும் அரசபதவியை வகித்துவரும் நவநந்தர்களைக் காட்டிலும் மிக்க பெருமையை யடைந்து வந்தான். ஆயினும், மௌரியன், ஒவ்வோரமயம், "நான் அரச புத்திரனாயிருந்தும் என்ன பயன்? நுண்ணறிவுடைய நூறு புத்திரர்களைப் பெற்றிருந்தும் என்ன பயன்? இந்நாட்டின் குடிமக்கள் இறைவனிடஞ் செலுத்தும் விசுவாசத்தைக் காட்டிலும் எண்மடங்கு விசுவாசம் என்னிடம் வைத்தும் என்ன பயன்? சாதாரண மனிதர்கள் செய்துவரும் சேவகத் தொழிலையல்லவோ நான் செய்து வருகின்றேன்'' என்று எண்ணுவான்.

நவநந்தர்களோ, மௌரியனுடைய மிகுந்த புத்திசாலிகளான நூறு புத்திரர்களையும், மௌரியனிடத்து அந்நாட்டுக் குடிகள் செலுத்திவரும் பக்தியையுங் கண்டு பொறாமை கொண்டு, ஓரிடத்தில் மந்திரியுடன் அமர்ந்து, "இவர்கள் நாளுக்கு நாள் அதிக செல்வாக்கைப் பெற்று வருவதால், ஒரு சமயம் இவர்கள் யாவரும் ஒருங்கு சேர்ந்து 'நாமெல்லோரும் அரசனுடைய புத்திர பௌத்திரர்கள்தாமே. நாமேன் இந்த நாட்டை யடையக்கூடாது? நமக்கு நாட்டை அரசன் வழங்காவிடினும் நமது புத்திபலத்தால் அதில் கலகஞ்செய்து நமது நாட்டத்தின்படி அதை யடையலாம்' என்று எண்ணுதலுங் கூடும்; எண்ணியபடி காரியத்தை அவர்கள் முடித்தலுங்கூடும். ஆதலால், அவர்களை நாம் எவ்விதத்திலாயினும் ஒழிக்க வழிதேடவேண்டும். உட்பகைவர்களாக விளங்கும் அவர்களை நாம் உபேக்ஷித்துவிட்டால் முடிவில் நமக்குப் பெருந் தீங்கு விளையுமென்பதிற் சந்

தேகமில்லை. பகைவன் ஒருவனுயிருந்தால் இத்துணை கவலைக் கிடமிராது. பகைவனுக்கோ சகலகலாவல்லவர்களாய் விளங்கும் நூற்றுவர் புத்திரர்களாக இருக்கின்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் ஓராயிரம் படைவீரர்களுக்குச் சமமானவர்கள். அங்ஙனம் கணக்கிட்டுப் பார்த்தால் நூறு புத்திரர்களும் இலக்ஷம் சேனு வீரர்களுக்கு ஒப்பாக நிற்கின்றனர். அவர்களை எவ்வித உபாயஞ் செய்தாவது ஒழித்தற்கே வழி தேடவேண்டும்'' என்று சதியாலோசனை செய்தனர்.

அதற்குப்பின் ஒருநாள், நவநந்தர்களும் மந்திரி இராக்ஷஸனும் ஓர் இரகசியமான இடத்தில் கூடி, ''மௌரியனையும் அவனது நூறு புத்திரர்களையும் எதிரிட்டுக் கொல்வதென்பது கூடாத காரியம். அவர்களெல்லோரையும் ஒரே காலத்தில் நாட்டார் அறியாவண்ணம் நமனுலகு சேர்ப்பதற்கான வழியைத் தேடவேண்டும். அதற்குப் பூமியில் ஒரு நிலவறையைக் கட்டி முடித்தல் வேண்டும்'' என்று தங்களுக்குள் தீர்மானித்துக்கொண்டு, சிறந்த சிற்பிகளை வரவழைத்து அவர்களுக்கு விசேஷ பொருள்கள் கொடுத்து, நகரின் புறத்தே பூமிக்குள் அழகிய ஒரு நிலவறையைக் கட்டி முடித்தனர்.

அதன்பின் நந்தர்கள் அரசாங்க சம்பந்தமான எல்லா விஷயங்களையும் அந்நிலவறையிலமர்ந்தே ஆலோசித்து வந்தனர். அவ்வாறு ஆலோசிக்கும் போதெல்லாம் மௌரியனையும் அவனது நூறு புத்திரர்களையும் உடன் வைத்துக் கொண்டே இருந்தனர். அதனுல் மௌரியனும் அவனது புத்திரர்களும் அந்நிலவறையைக் குறித்துச் சந்தேகப்படாதிருந்தார்கள்.

இப்படிச் சின்னுட்கள்வரை நடந்தேறியபின், நந்தர்களும் இராக்ஷஸனும் அவர்களைக் கொல்ல நாளொன்று குறித்துக்கொண்டு, அந்நாள் வந்ததும் அரசாங்க ஏவலாளர்களை அழைத்து, ''அவசரமாய் அரசாங்க சம்பந்தமான

காரியங்களை ஆலோசிக்க வேண்டியதாக இருக்கிறது ; மௌரியரையும் அவரது நூறு புத்திரர்களையும் நிலவறை மண்டபத்திற்கு வந்து சேரும்படி தெரிவியுங்கள் '' என்று ஆஞ்ஞாபித்துத் தங்களுக்கு இரகசியமாகவும் நம்பிக்கையாகவும் ஏவற்றொழில் புரியும் ஆட்களிடத்தில் மௌரியனும் அவன் புத்திரர்கள் நூற்றுவரும் நிலவறையினுள் புகுந்தானதும் அவ்வறையைப்பூட்டிக் திறவுகோலைத் தங்களிடம் கொண்டு வருமாறு கட்டளையிட்டு, அக்காரியம் நிறைவேறுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தார்கள்.

நந்தர்களிடம் விடைபெற்றுச் சென்ற ஏவலாளர்களில் ஒரு பகுதியினர் மௌரியன்வதியும் மாளிகைக்குச் சென்று, ஆண்டு மௌரியனையும் அவனது நூறு புத்திரர்களையும் கண்டு, " பிரபுக்களே ! நவநாயகர்கள் அரசாங்க சம்பந்தமான ஒரு காரியத்தை அவசரமாக யோசித்து முடிவுசெய்ய வேண்டுமாம். அது விஷயமாகத் தங்களோடு கலந்து ஆலோசிக்கத் தாங்களெல்லோரும் நிலவறை மண்டபத்திற்கு இன்னே புறப்பட்டு வரும்படி எங்களிடம் செய்தி சொல்லியனுப்பினார்கள் '' என்றனர்.

மௌரியனும், அவன் புத்திரர்களும், "அங்ஙனமே வருகின்றோமென்று உங்களரசரிடத்தில் தெரிவியுங்கள் '' என்று ஏவலாளரிடங் கூறி அவர்களை யனுப்பிவிட்டு, எல்லோரும் நகரின் புறத்தேயுள்ள நிலவறையைப் போயடைந்தனர். அவர்களெல்லோரும் நிலவறையிற் புகும் வரையில் வாயில் காவலர் போல் நடித்து வந்தவர், நூற்றொருவருக்கும் காலதூதர் போல் தோன்றி, அந்நிலவறையின் கதவைத் தாளிட்டுப் பூட்டி, அதன் திறவுகோலை மௌரியனுக்கும் அவன் புத்திரர்களுக்கும் எமனைப்போல் விளங்கிய நவநந்தர்களிடம் அதி சாக்கிரதையுடன் இரகசியமாகக் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

நிலவறையுள் புகுந்த மௌரியனும் அவன் புத்திரர்களும் நவநந்தர்களையாவது மந்திரி இராக்ஷஸனையாவது ஆண்டு காணவில்லை. அவர்களுக்குப் பதிலாக, பலவகை உணவுகளையும் நிரப்பி வைத்திருந்த நூற்றொரு பாத்திரங்களையும் நூற்றொரு விளக்குக்களையுங் கண்டனர். அவைகளைக் கண்டு மௌரியன் "இது நமது ஞாதிகளும் கொடிய இராக்ஷஸனும் கூடிப் புரிந்த வேலை'' என்று தனக்குள் ஊகித்தறிந்து, புத்திரர்களைப் பார்த்து, "எனது அரிய புத்திரர்களே! நம்மை இத்துன்பத்திற் காளாக்கியவர் மாமிசபிண்டமாய் வந்துதித்த பாபிகளாகிய நவநந்தர்களும், அவர்களுடைய மந்திரி இராக்ஷஸனுமாகும். நாம் முதலிலேயே இந்நிலவறையின் சூதை அறியாமற் போனோம். இப்பொழுது தான் இந்நிலவறையைச் சமைத்ததின் காரணம் தெரிகிறது. இனி நாம் இதைக் குறித்துத் துக்கப்படுவதிற் பிரயோசனமில்லை. தெய்வ சங்கல்பத்திற்கு யாது செய்தற்கூடும். எல்லாம் ஊழின்படி நடக்கிறது.

ஊழிற் பெருவலி யாவுள ?—மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும்.

ஆதலின், நாம் வீணே வருந்துதலை யொழித்துப் பகைவர்களை நாசஞ் செய்வதற்கான உபாயம் எதாவது இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். நாம் எப்படியும் இந்நிலவறையில் இறப்பது திண்ணம். இறக்கின்ற நாம், பகைவர்கள் நாசமடைவதற்கான சூழ்ச்சியைச் செய்து இறந்தோமானால், இறந்த பின்பும் புகழடைவோம். ஆதலால், இங்கு வைத்திருக்கும் நூற்றொரு பாத்திரங்களிலுள்ள உணவையும், நூற்றொரு விளக்குக்களிலுள்ள எண்ணெயையும் சேர்த்து வைத்துக் கொண்டு, சிறுகச்சிறுக உணவைப் புசித்தும், விளக்கை எரியவிட்டும் நம்மவரில் ஒருவன் உயிர் பிழைத்திருக்கட்டும். தெய்வகதியால் ஒரு சமயம் அவன் இவ்

வறையினின்றும் வெளியேறும் பாக்கியம் கிடைக்குமானால்,-அவன் வெளிச்சென்று பகைவர்களை நாசஞ்செய்யட்டும். இதற்கு இசைந்து உயிர் வாழ்பவன் தவிர மற்ற நூற்றுவரும் இப்பொழுதே இறந்துவிடுவோம். நாம் இப்பொழுது இறப்பதற்கு அஞ்சுவோமானாலும் நாளடைவில் இறப்போம் என்பதற்கு யாதோர் ஐயமுமின்று" என்றனன்.

தந்தை மௌரியன் இவ்வாறு கூறக் கேட்ட புத்திரர்கள் யாவரும், இன்னது செய்வது, ஏது மொழிவது என்று ஒன்றுந் தோன்றப் பெறாதவர்களாய்த் திகைத்தனர். அப்பொழுது மௌரியன், சகலகலா வல்லவனும் நுண்ணறிவையுடையவனுமான சந்திரகுப்தனை இரக்கத்துடன் நோக்கினன். அக் குறிப்பை யறிந்த அறிவின் மிக்கானான சந்திரகுப்தன், தன் தந்தையைப் பார்த்து, "என் அன்புள்ள பிதாவே! தாங்கள் மொழிந்தபடி தெய்வசகாயம் எனக்குச் சிறிது கிடைக்குமானால் நானொருவனே நம் பகைவர்களை இப்பாரிலிராவண்ணம் வேரறுத்து இந்நாட்டிற்கு வேந்தனுமாவேன். தாங்கள் ஆஞ்ஞாபித்தவண்ணமே இவ்வுணவைப் புசித்து உயிர் வாழ்ந்து இதினின்றும் வெளியேறும் சமயத்தை எதிர்பார்க்கின்றேன். தாங்கள் கவலையை விட்டொழிக" என மொழிந்தனன்.

தநயன் சந்திரகுப்தன் இவ்வாறு மொழியவே, தந்தை மௌரியன் தனக்குற்ற கவலையை மாற்றித் தன் தநயர் தொண்ணூற்றொன்பதின்மரோடு அவனை வாழ்த்தி மாண்டனன். அதன் பின், சந்திரகுப்தன், ஆண்டுள்ள பலவகை உண்டிகளைச் சேகரித்து வைத்துக்கொண்டு சிறுகச் சிறுகப் புசித்து, நிலவறையினுள்ளிருந்து நிலப் பரப்பின்மீது செல்லக் காலம் எப்பொழுது வாய்க்குமோ எனக் கடவுளை நினைத்துப் பிரார்த்தித்துக்கொண்டிருந்தனன்.

---

## அத்தியாயம் 4

### அரிபரி சோதனை

இங்ஙனம் சந்திரகுப்தன் அந்நிலவறையினுள் கஷ்டத்துடன் காலத்தைக் கழித்துவர, மூன்று மாதத்திற்குப்பின், வங்கநாட்டதிபதியான நராதிபன் என்னும் மன்னன், மதிமிக்க மௌரியனும், அறிவிலும் ஆண்மையிலுஞ் சிறந்த அவன் புத்திரர்களும் மகத நாட்டில் இல்லாததைத் தனது ஒற்றர்களாலறிந்து, நவநந்தர்களின் அறிவைப் பரிசோதிக்கக் கருதி, சிற்பத்தொழிலில் சிறந்து விளங்கும் சிற்பிகளையும், யந்திர நிர்மாணிகர்களையும் வரவழைத்து, மிகுந்த பொருள் கொடுத்துப் பொய்ச் சிங்கமொன்றை யமைக்க ஆஞ்ஞாபித்தனன். கைத்தொழிலில் வல்ல அச்சிற்பிகளும் உடலுக்குள் இயந்திரங்களை அமைத்து, அதன்மீது அரக்கையும் மெழுகையும் பூசி, எவரும் இதனாலிது இயன்றதென்று அறியாவண்ணம் சிங்கத்தின் உரோமங்களை ஒட்டுவித்து, உயிருள்ள அரியே அடியெடுத்துலவுவது போலச் செய்தனர். அரசன் அதுகண்டு, 'இது உண்மைச் சிங்கமே' எனச் சிறப்பித்துப் பேசி, அதனை இருப்புக் கம்பிகளமைந்த கூட்டிற்குளடைக்கும்படி செய்து, அப்பஞ்சரத்தின்மீது "இக்கூண்டினைச் சேதிக்காமல் இதிலுள்ள கோளரியை வெளியாக்கும் விவேகம் பொருந்திய வீரர்களுமுண்டோ?" என வரைந்து அதை மகதநாட்டு மன்னர் காண ஆட்கள் மூலம் அனுப்பினான்.

ஆட்களும் அப்பஞ்சரத்தினை மகத நாட்டிற்குக்கொண்டு போய்ச் சேர்த்தனர். ஆண்டுள்ளோர் அச்சிங்கத்தையும் அதனை யடக்கி வைத்திருக்கும் பஞ்சரத்தின் முகப்பில் வரைந்துள்ள வாசகத்தையுங் கண்டு, "இஃதென்ன புதுமை! கூண்டைப் பிரிக்காமல் கோளரியை விடுத்தலுங் கூடுமோ?"

என்று ஆச்சரியமாகப் பேசி, அரசன் சமுகமும் அறிவித்த னர். அதனைக் கேட்ட நவநந்தர்களும் மந்திரி இராக்ஷஸனும் அப்பஞ்சரத்தின் அருகடைந்து, 'இது எங்ஙனம் சாத்தியமாகும்?' என எண்ணமிட்டு, அதனை வெளிப்படுத்தும் வகையறியாமல் தயங்கி நின்றனர். அப்பொழுது, மௌரியரிடம் அன்பும் அபிமானமுமுடைய விசிகுண்டனென்பவன், பஞ்சரத்தினுள்ளிருக்கும் அரியை வெளிவிடுக்க வகையறியாது தயங்கும் நவநந்தர்களையும் இராக்ஷஸனையும் நோக்கி, "பிரபுக்களே, இப்பொழுது மௌரிய புத்திரர்களுள் சகலகலா வல்லவனுய் விளங்கிய சந்திரகுப்தன் என்பவன் ஈண்டு இருந்தால் இப்பஞ்சரத்திலுள்ள சிங்கத்தை எவ்வித உபாயஞ்செய்தாவது வெளிப்படுத்துவான். அவன் இப்பொழுது இலனே; என் செய்வது?" என்றனன்.

இதனைக் கேட்ட இராக்ஷஸனும் நவநந்தர்களும் 'இச்சிங்கத்தை வெளியாக்கவல்ல உபாயந்தேடக்கூடியவன் நிலவறையினுள் பிழைத்திருக்கவும் வகைதேடியிருப்பான்' என்று நிச்சயித்து நிலவறைக்குச் சென்று அதனைத் திறந்து பார்த்தார்கள். அதில் வெளுத்த முகத்துடனும் இளைத்த உடலுடனும் சந்திரகுப்தன் உயிரோடிருந்தான். அதுகாறும் அவன் உயிரோடிருந்ததற்கு அவர்கள் ஆச்சரியமுற்று, அவன் சமீபமடைந்து அவனைக் கண்டு தாங்கள் கோரிவந்த காரணத்தைத் தெரிவித்து, அவனை வெளிவரும்படி அழைத்தார்கள். அவனே தான் வெளியேற எப்பொழுது கடவுளின் அருள் பிறக்குமோ என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தவன். இப்பொழுது அவன் அவர்களைக் கண்டு தான் வெளிவரச் சம்மதமில்லாதவன் போல் நடித்து, அவர்களை நோக்கி, "அன்புடையீர்! எனது அரிய பிதாவும் சகோதரர்களும் என் கண் முன்னே இறந்துபட்டனர்; அவர்களுடன் இறவாமல் பாபியாகிய நான் இது வரையில் பிழைத்திருக்

கின்றேன். நானும் இன்னும் சிறிது நாட்களுள் இறந்து விடுவேன். என்னை ஏன் இப்பொழுது அழைக்கின்றீர்கள்? அன்புள்ள தந்தையையும் சகோதாரரையும் இழந்த அபாக்கியனான எனக்கு என்ன வேலை யிருக்கிறது?'' என்று கண்ணீருங் கம்பலையுமாகக் கூறிக் கீழே விழுந்து சோகித்தனன்.

அவன் அங்ஙனம் சோகித்ததைக் கண்ட நவநந்தர்கள், அவனது சோகத்தைத் தெளிவித்து அவனைப் பார்த்து, "புத்திர சிகாமணியே, நீ இனி வருந்த வேண்டாம். நாங்களே உனக்கு அன்புள்ள தந்தையாக இருக்கின்றோம். உனது தந்தையின் தனத்தையும் கனத்தையும் உனக்கே யளிக்கின்றோம். நடந்ததை குறித்து விசனிக்க வேண்டாம்'' என்று சமாதான வார்த்தைகள் கூறி அவனை அழைத்தனர். அவன் வெளிவருவதற்குச் சம்மதமுள்ளவனாயினும், அவர்கள் கட்டாயப்படுத்தி அழைப்பதின் நிமித்தம் வெளிவருபவன் போல் நடித்து முடிவில் வெளியே வந்தனன்.

அங்ஙனம் வெளிவந்த சந்திரகுப்தனை நந்தர்கள் அரியிருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்று, அதன் விருத்தாந்தத்தைக் கூறிப் பஞ்சரத்தின் தலையில் வரைந்துள்ள வாசகத்தைச் சுட்டிக் காட்டினர். சந்திரகுப்தன் பஞ்சரத்தையும் சிங்கத்தையும் உற்று நோக்கி, 'இக்கூண்டைத் திறக்கவும் மூடவுங் கூடிய கதவுவொன்றும் இதிலமைத்திருக்கக் காணோம். இச்சிங்கத்தை இக்கூண்டினில் முதலில் அடைத்தவாறு எப்படி? இது இயற்கைச் சிங்கமோ? அல்லது செயற்கைச் சிங்கமோ? செயற்கைச் சிங்கமாயின், கூண்டின் காவலன் கூண்டைச் சுற்றி வரும் பொழுதெல்லாம் இது அவனுடன் சுற்றி வருமா? எதற்கும் இது செயற்கை அல்லது இயற்கை என்பதைச் சில பரீக்ஷைகள் செய்து கண்டறிவோ'மென்று தனக்குள் சிந்தித்து, பின்பு, அரிக்குப் பகையாகிய கரியை அதன் முன் கொண்டுவந்து நிறுத்தினன். அது அக்கரியைக்

கண்டு ஒன்றுஞ் செய்யாது அசைவற்று நின்றது. அதனைக் கண்ட சந்திரகுப்தன், 'இது உண்மையான சிங்கமாயிருக்கு மானால் யானையைக் கண்டு வானிடி யென்னும்படி வாய் விட்டுக் கர்ச்சித்திருக்கும். அங்ஙனமிலாது இது வாளா நின்றமையின் இதனைச் செயற்கைச் சிங்கமென்று திண்ண மாய்ச் சொல்லலாம்' என்று தனக்குள் முடிவு செய்து கொண்டு, பஞ்சரக்ஷகனை அழைத்து, "நீ உன் கையிலுள்ள இரும்புக் கம்பியைக் கீழெறிந்துவிட்டு இக்கூண்டைச் சுற்றி வா, பார்ப்போம்" என்றனன்.

அதைக் கேட்டுக் கூண்டின் காவலன் மனந்திடுக்கிட்டு, 'எவருமுணராத இவ்விரகசியத்தை இவன் எப்படியோ உணர்ந்துவிட்டானே. இதனை யுணர்ந்தவன் மிகுந்த சமர்த்தன் என்பதில் எள்ளளவும் சந்தேகமேயில்லை. இனி இவனிடத் தில் நமது ஜாலமொன்றும் பலியாது' என்றெண்ணி, அவ னிடம் அவ்விருப்புக் கம்பியைக் கொடுத்துவிட்டுத் தான் ஒருபுறம் ஒதுங்கி நின்றனன். சந்திரகுப்தன், இருப்புக் கம்பியிலுள்ள காந்த சக்தியால் இரும்பின் சம்பந்தத்தினாலும் அரக்கு மெழுகு முதலியவற்றாலுமான அச்செயற்கைச் சிங்கத்தைக் காவலன் ஆட்டிவைத்தான் என்பதை நன் குணர்ந்து, அவ்வரிக்கு எரி மூட்டினன். எரி பற்றிய அவ் வரி உருகலாயிற்று. அதன்பின் எஞ்சி நின்றவை அதன் உடலுள் அமைத்துள்ள இருப்பு இயந்திரங்களேயாகும்.

சந்திரகுப்தன் அப்பொய்ச் சிங்கத்தின் மர்மத்தை வெளி யாக்கியபின், அக்கூண்டினைக் கொண்டுவந்த ஆட்கள், "இனி நாம் இங்கிருத்தல் தகாது. நவநந்தர்கள், 'நம்மை ஏமாற்று வதற்குச் செய்துவந்த ஆட்களைப் பிடியுங்கள். சிறையிலடை யுங்கள்' என்று ஒருகால் தங்கள் ஏவலாளர்க்குக் கட்டளை யிடுதலுங் கூடும்" என்று எண்ணிக் கூண்டைச் சூழ்ந்திருந்த ஜனங்களிடையே மறைந்து தங்களூர் சென்று, நராதிப

மன்னனைக் கண்டு அங்கு நடந்தனவெல்லாங் கூறினர். அரசன் அதுகேட்டு, 'நாம் செய்த அரிபரி சோதனையில் வெற்றி யடைந்தவன் சந்திரகுப்தனுகத்தா னிருக்கவேண்டும். அவ னையல்லாது அதன் இரகசியத்தை அங்கு அறிவார் ஒருவரு மிலர்' என்று அனுமானித்து அறிந்துகொண்டான்.

மௌரியபுத்திரன் பொய்ச் சிங்கத்தின் அங்கத்தைச் சேதித்து அது செயற்கைச் சிங்கமென யாவரும் அறியக் காட்டியதும், நவநந்தர்கள் தங்களுக்குற்ற அவமானம் நீங்கி யது என்று அகமகிழ்ச்சி கொண்டனர். நகரத்து மாந்தர் 'இவன் நல்ல விவேகி' என அவனைப் புகழ்ந்தனர்.

---

## அத்தியாயம் 5

### சாணக்கியன் சபதம்

சந்திரகுப்தன் அரிபரிசோதனை செய்து வெற்றி பெற்ற பின், அவனுக்கு அரசாங்கத்தில் என்னவேலை கொடுப் பதென்று நவநந்தர்கள் இராக்ஷஸனுடனிருந்து ஆராய்வ ராயினர்.

அப்பொழுது அமாத்திய இராக்ஷஸன் நவநாயகர்களைப் பார்த்து, "அரச பூமான்களே! நம்மெல்லோரையும் விடச்சந் திரகுப்தன் நுண்ணறிவுடையனென்பது அவன் செய்த அரிபரி சோதனை வெற்றியினுலேயே நன்கு விளங்குகிறது. அத் தகையனுக்கு அரசாங்கத்தில் உயரிய உத்தியோகம் கொடுத் தால் அவன் அரசாங்கத்தின் மர்மங்களை அறிதினுணர்ந்து நமக்கு ஒரு சமயம் கேடுசூழ்தலுங் கூடும். நாமோ அவன் வகையாருக்கு என்றும் மறக்கக் கூடாத கேட்டினை விளைவித் திருக்கின்றோம். அவனோ, அவன் தந்தைக்கும் சகோதர னுக்கும் இழைத்த தீங்கினை அறமறந்தவன் போல் நம்மிடை யில் தோன்றுகின்றான். நீறு பூத்த நெருப்பைப் போலிருக்கும்

அவனை நாம் எப்படி முழுவதும் நம்புவது? அவனை முழுவதும் நம்பாது புறக்கணித்தலுங் கூடாத காரியம். நாம் அவனை ஆதரித்தது போலுமிருக்கவேண்டும். அரசாங்க விஷயமொன்றும் அவன் அறியாதபடியும் நடத்தவேண்டும். இதற்குப் பொருத்தமான உத்தியோகம் அன்னசத்திரத்திற்குத் தலைமை அதிகாரியாயிருப்பதுதான். அத்தலைமை அதிகாரத்தை அவன் வகித்து வந்தால், அன்ன சத்திரத்திற்கு வரும் அந்தணர் அகங்கோண அவன் நடந்துகொள்ளவுங் கூடும். அக்காலையில் அவனுக்கு அவர்கள் சாபங்கொடுத்தலும் நேரும். அதனால் அவன் விருத்திக்கு வாராமல் நசித்துப் போவான்'' என்று தன் யுக்தியான அபிப்பிராயத்தை வெளியிட்டான்.

அரச புத்திரர்கள், அமாத்தியன் வெளியிட்ட அதி நுட்பமான கருத்துக்களைக் கேட்டு அகங் களித்து, அவனை நோக்கி, 'மதிவல்லப! தாங்கள் கூறியவை யாவும் உண்மையே. தங்கள் கருத்துப்படியே அச்சந்திரகுப்தனை அன்ன சத்திரத்திற்குத் தலைவனாய் நியமிக்கவே நாங்களும் சம்மதிக்கின்றோம் என்றனர்.

அவர்கள் இங்ஙனம் சந்திரகுப்தனுக்கு உத்தியோகம் கொடுப்பதைப் பற்றிய ஆலோசனையைச் செய்து மேற்கூறிய முடிவுக்கு வந்தபின், அவனை யழைத்து, 'சந்திரகுப்த! நமது நகரத்தில் புண்ணியார்த்தமாக ஏற்படுத்தியுள்ள அந்தணர் அன்னசாலையில் அன்னம் அருந்தவரும் அந்தணாளர்களைத் தக்கபடி விசாரித்து அன்னம் உண்பிக்கச் செய்பவர் அங்கு இல்லை. அதனால் அந்தணாளர்க்குக் கோபமும் எங்களுக்குப் பாபமும் உண்டாகிறது. இக்குறையை நிவர்த்திக்கத் தக்கவர் இந்நகரில் எவருங் கிடைத்திலர். இதைப்பற்றி நாங்கள் சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது உன்னுடைய நினைவு எங்களுடைய சிந்தனையில் வந்தது. அதன் பின் நாங்கள்

அரிய கலைகள் பயின்ற சந்திரகுப்தனே, செந்தண்மை பூண்டொழுகும் அந்தணாளர் அகத்தைக் களிக்கச் செய்யவல்லவனென்று முடிவு செய்தோம். நீ இவ்வரிய தொழிலை ஏற்றுச் செய்துவந்தால் உனக்குப் பெரும் புண்ணியமுண்டாகும்'' என்று நயமாக மொழிந்தனர்.

சந்திரகுப்தன் இந்நயவஞ்சகமொழியைக் கேட்டு, மறுத்தொன்றும் கூறாமல், "தங்கள் சித்தம் எனது பாக்கியம்" என்று சொல்லி அவ்வேலையை ஒப்புக்கொண்டு, இறந்த தன் தந்தைக்கும் சகோதரர்களுக்கும் இயற்ற வேண்டிய கரும கடன்களைச் செய்து முடித்து, அதன்பின் அன்னசத்திரத்தின் விசாரணைத்தலைவன் உத்தியோகத்தை வகித்துவந்தான்.

சந்திரகுப்தன் அன்ன சத்திரத்திற்கு விசாரணைத் தலைவனாய் வந்த பின்பு, கற்றுத்துறைபோய பல பெரியோர்களைச் சந்தித்து உரையாடும் பாக்கியத்தைப் பெற்று வந்தான். அங்ஙனம் பெறும் அவன்,

> "நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
> நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே; நல்லார்
> குணங்க ளுரைப்பதுவும் நன்றே; அவரோ
> டிணங்கி யிருப்பதுவு நன்று"

என்றும், 'உலகத்தில் புத்திமான் பலவானன்றிப் படைப் பெருக்க முடையான் பலவானாகான்; ஆதலின் புத்திகோசரத்திலும் நீதி சாஸ்திரத்திலும் வல்ல பெரியார் ஒருவர் தனக்குத்துணையாய்க் கிடைக்கமாட்டாரோ' வென்றும் எண்ணுவான்.

இங்ஙனம் அவன் எண்ணமிட்டுக்கொண்டு காலத்தைக் கடத்திவருகின்றபோது, ஒரு நாள், சத்திரத்தை நோக்கி ஓர் அந்தணாளர் வந்துகொண்டிருந்தார். அவர் வருகின்ற வழியில் அறுத்துக் கட்டையாக விட்டிருந்த தருப்பைப் புல்லொன்றிருந்தது. அது அவ்வந்தணாளரை அடியெடுத்து

வைக்காவண்ணம் தடுக்கித் துன்புறுத்தியது. அதனால் அவ் வந்தணருக்குச் சிற்ற முண்டாயிற்று. உடனே அவர் தனக் குத் துன்புறுத்திய அப்புல்லைத் தரையிலிருந்து வேரோடும் கல்லி யெடுத்துப் பொடியாக்கிப் புடமிட்டு நீரிற் கலக்கிக் குடித்தார். இதனை அன்னசத்திரத்திற்கு வரும் அந்தண ளர்களை அன்புடன் அழைக்க நின்றுகொண்டிருந்த சந்திர குப்தன் கண்டு, “இஃதென்ன புதுமை! புல்லை இவ்வாறு செய்வாரும் உண்டோ? இங்ஙனம் செய்தவரைப் பார்த் தால் சாதாரணமானவராகவும் காணோம். இவர் முகத்தில் பிரமவொளி இலங்குகின்றது; வயதில் இளையவர்போல் காணப்பட்டாலும், அறிவிற் பெரியாராகக் காணப்படுகிறார். இத்தகையர் அவ்வற்ப புல்லை இங்ஙனம் செய்தற்குக் காரண மென்ன? எதற்கும் அவரைக் கண்டு கேட்டறிவோம்” என் றெண்ணி, அவர் சமீபமடைந்து அவரைக் கண்டு, “சுவாமி! அடியேன் நமஸ்கரிக்கின்றேன். தாங்கள் இப்பொழுது இங்கு என்ன காரியம் செய்தீர்கள்? அதை அடியேனுக்கு விளக் கிச் சொல்லவேண்டு” மென்று மிகுந்த வினயத்துடன் கேட்டனன்.

அந்தணர் :—நான் இச்சத்திரத்தை நோக்கி வரும்பொழுது வழியில் இப்புல் என் காலைக் குத்தித் தடுக்கிற்று. அதனால் எனக்குப் பெருங்கோபமுண்டாயிற்று. உடனே நான் அப்புல்லை வேரோடும் களைந்து பொடி செய்து புடமிட்டு நீரிற் கலக்கிக் குடித்தேன்.

சந்திரகுப்தன் :—சுவாமி! அப்புல்லை அங்ஙனம் பொடி செய்து குடித்ததனால் ஏதேனும் பிரயோசனமுண்டா?

அந்த :—நான் அவ்வாறு செய்ததனால்தான் என் கோபாக்கினி தணிந்தது.

சந்திர :—சுவாமி, புல் அற்பமான வஸ்து; அதன்மீது தங்க ளுக்குக் கோபமுண்டாயிற்று; அக்கணமே அதைப்

புடமாக்கிக் குடித்துக் கோபத்தைத் தணித்துக் கொண்டீர். தங்களுக்குப் பலவானன அரசனெருவன் தீங்கியற்றினல் அப்பொழுது அவனை என்ன செய்யக் கூடும் ?

அந்த :—சிறுவனே ! நீ என் புத்தி பலத்தை அறியாய்; அரசனுக்குத் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, காலாள்படை என்னும் நாற்படைகளும் தெய்வ சகாயமும் துணையாக இருப்பதாகக் கூறுவார்கள்.நான் அவற்றைப் பெரியதாக எண்ணேன். அவை எல்லாவற்றையும்விட புத்திபலமே மேலான துணை என்பேன். அப்பலம் என்னிடத்தில் பொருந்தியிருக்கும்போது அரசன் எனக்கு எம்மாத்திரம்? அவனுக்கு எத்துணைத் துணைப்பலமிருப்பினும் அவற்றையெல்லாம் வெல்ல எனக்கு ஆற்றல் உண்டு.

சந்திர :—சுவாமி! தாங்கள் மிகவும் மகிமையுடையவராய்த் தோன்றுகின்றீர். தங்கள் திருநாமம் யாதோ ? உறையும் பதி எதுவோ ? தங்கள் திருவுள்ளம் எதை நாடிச் செல்கின்றதோ ? சிறுவன் அறிய அவாக்கொண்டுள்ளேன்.

அந்த :—சிறுவனே, நான் தென்தேசத்தில் வசிப்பவன். எனக்கு விஷ்ணுகுப்தன், சாணக்கியன், கௌடல்யன் என மூன்று பெயர்களுண்டு. நான் முறைப்படி சகல சாஸ்திரங்களையும் கற்றிருக்கின்றேன். இப்பொழுது நந்தர்கள் ஏற்படுத்தியுள்ள அன்னசத்திரத்திலமர்ந்து அன்னம் புசிக்க வந்துள்ளேன். அவ்வன்ன சத்திரம் எங்குளது ? அதை மேல்விசாரணை செய்யும் அந்தணப்பிரியன் சந்திரகுப்தன் இப்பொழுது எங்குளன் ?

சந்திர :—அந்தணர் பெருமானே, இச்சிறுவன்தான் தாங்கள் தேடும் சந்திரகுப்தன். அதோ தெரிகின்றதே அது

தான் அன்ன சத்திரம். தாங்களிடும் பணிகளைச் செய்யக் காத்துக்கொண்டிருக்கின்றேன்.

சாணக்கியன் :—நீயா சந்திரகுப்தன். நீ இந்நாட்டு ராஜ பௌத்திரனல்லவோ? உன்னை நான் இதுவரையில் இன்னுனென்றறியாமல் அலக்ஷியமான வார்த்தைகள் கூறினேன். அதனுல் என் மனம் இப்பொழுது நாணமடைகிறது. இந்நாணம் தீர உனக்கிஷ்டமான காரியத்தைச் செய்கின்றேன். உன்மீது எனக்கு அதிகப் பிரியமுண்டாகிறது.

சந்திர :—சுவாமி, நான் சிறுவன்; தாங்கள் பெரியவர். தாங்கள் கூறியவை யாவும் முறையேயன்றிக் குறையைத் தருவன ஒன்றுமில்லை. தாங்கள் ஏன் நாணம் கொள்ள வேண்டும். தேவரீர் எனக்கிஷ்டமான காரியத்தைச் செய்கிறேன் என்று கூறியபடி, போஜனசாலையில் போஜனமருந்தித் திரும்பும்பொழுது எனது கிருகத்திற்கு எழுந்தருளிப் புனிதமாக்கும்படி பிரார்த்திக்கின்றேன். இதுவே எனது இஷ்டம்.

சாண :—சந்திரகுப்த! அங்ஙனமே உன் இல்லத்திற்கு வருகின்றேன்.

பிறகு சந்திரகுப்தன் சாணக்கியனைப் பட்டண சமீபம் அழைத்துச் சென்று அவனிடம் தன் தந்தை சகோதரர் முதலானவர்கள் அநியாயமாய் மடிந்த வரலாறுகளை எடுத்துக் கூறி அவன் மனம் தன்மீது இரங்கும்படிச் செய்தனன். அதன்பின் அவனைத் தீர்த்தமாடுவதற்கு நதிக்கு அழைத்துக் கொண்டுபோய்த் தீர்த்தமாடுவித்துப் பின்பு போஜனசாலையில்விட்டுத் தான் தனது கிருகத்திற்குச் செல்ல விடை பெற்றுக்கொண்டு, கிருகத்தையடைந்து 'நான் பலநாளெண்ணமிட்டுக் கொண்டிருந்தது இன்று நிறைவேறியது. இம்மகானின் துணை எனக்குப் பூரணமாகக் கிடைக்குமானுல் என்

பகைவர்களை ஒரு பொருளாக மதியேன். போசனத்திற்குச் சென்றிருக்கும் அந்தணோத்தமரைத் தக்கபடி நவநந்தர்கள் வரவேற்று உபசரியார்கள். பூசிக்கத்தகுந்த அப்பூசுரரை அவர்கள் அவமதிப்பார்களேயானல் அன்றே அவர்கள் அழிந்தார்கள்' என்று தனக்குள் யூகித்து எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

அவன் அங்ஙனமிருக்க, போஜனசாலைக்குள் நுழைந்த சாணக்கியன், ஆண்டு ஒருபக்கத்தில் ஓரழகிய ஆசனத்தினெதிரில் வைத்திருந்த ஒரு பொற் பாத்திரத்தையும், அவ்வாசனத்திற்கு நேர்முகமாக ஒன்பது ஆசனங்களினெதிரில் ஒன்பது பொற்பாத்திரங்கள் வைத்திருப்பதையும், அவற்றின் நான்கு பக்கங்களிலும் பல ஆசனங்களினெதிரில் வெள்ளிப் பாத்திரங்கள் அமைத்திருப்பதையுங் கண்டு, அங்குள்ளோரை நோக்கி, " இங்கே இட்டிருக்கும் பல ஆசனங்களில் எவரெவர் எவ்வெவ்வாசனத்தி லமரவேண்டும்.உரைப்பீராக" என்றனன். ஆண்டுள்ளோர், " இங்கு அமைத்திருக்கும் பொன் பாத்திரங்கள் பத்தில் ஒன்பது நவநாயகர்களுக்கும், ஒன்று அந்தணோத்தமருக்கும், மற்ற பல வெள்ளிப் பாத்திரங்கள் பிராமண கோஷ்டிகளுக்குமாகும் " என்றனர். அப்பொழுது சாணக்கியன், " நான் அந்தணர்களில் உத்தமமானவன். நானே இவ்வக்கிராசனத்திலமர யோக்கியதையுடையவன்" என்று கூறிக்கொண்டு அவ்வாசனத்திலமர்ந்தனன்.

பின்பு, சிறிது நேரத்திற்குள் விசேஷ பிராமணர்களுடன் நவநந்தர்கள் போஜனசாலைக்கு வந்து சேர்ந்தனர். அப்பொழுது, அக்கிராசனபீடத்தில் அமர்ந்திருக்கும் இளம்பிராயமுள்ள சாணக்கியனைப் பார்த்து, நவநந்தர்கள், " மீசையும் அரும்பாத இச்சிறுவன் மகாபண்டித அந்தணோத்தமருக்குரிய அக்கிராசனத்தில் சிறிதும் சங்கையில்லாது அமர்ந்

திருக்கின்றனே. இவன் யாவன்? இவனை அவ்வாசனத்தி னின்றும் அப்புறப்படுத்துங்கள்" என்றனர். அதற்குச் சாணக்கியன், அவர்களைப் பார்த்து, "ஏ! இராஜகுமாரர்களே! இச்சபையில் வேத சாஸ்திரங்களிலும் நீதி சாஸ்திரங்களி லும் எனக்குச் சமமானவர்கள் எவரேனும் உண்டாயின் அவரை என்முன் கொண்டுவாருங்கள். அவர் என்னைப் பரீக்ஷிக்கட்டும். அப்பொழுது நான் அக்கிராசனத்திற்கு அருகனில்லையென்று ஏற்படுமாயின் இவ்வாசனத்தைவிட்டு அக்கணமே இறங்கிவிடுகின்றேன். அங்ஙனமிலாது, நீங்கள் விறட்டும் மிரட்டலுக்குப் பயந்து இதினின்றும் இறங்கேன்" என்று மிகுந்த ரோஷத்துடனும் நியாயத்துடனும் கூறினன்.

அதுகேட்டு நவநந்தர்கள் மிகவும் கோபங்கொண்டு, அச்சாணக்கியன் சிகையைப் பிடித்து இழுத்து வெளியே தள்ளி அவ்வாசனத்தில் ஒரு விருத்த பிராமணனை நியமித்த னர். அப்பொழுது சாணக்கியன், உருத்திரமூர்த்தியே போன்று கோபங்கொண்டு நவநந்தர்களைப் பார்த்து, "ஏ, க்ஷத்திரியர்களே! எவ்வகையினும் அக்கிராசன பதவிக்குரிய என்னை மதியாது சிகை பிடித்துத் தள்ளினீர்களல்லவா? உங்களையெல்லாம் நமனுக்கு விருந்து செய்த பின்பு இப் பொழுது அவிழ்ந்துள்ள இச்சிகையினை முடிகின்றேன். உங்கள் அகங்காரத்துக்குக் காரணமாக விளங்கும் இந்நாட் டினையும் நீங்கள் உபேக்ஷித்த இவ்வன்னசத்திரத்தின் மேல் விசாரணைக்காரனுக்கே உரிமையாக்கி முடிசூட்டி வைக்கின் றேன்" என்று கடூரமான சபதங்கூறி, வெளியே வந்து, சந்திரகுப்தன் இல்லத்திற்கேகி அன்னமுண்டு, அவனிடம் தான் சபதங்கூறிய வரலாற்றினை எடுத்துச் சொல்லி, "இவ் விராஜ்யத்தை உனக்கே முடிசூட்டி வைக்கின்றேன்" என்று அவனுக்கு உறுதி கூறி வெளிச்சென்றனன்.

---

## அத்தியாயம் 6

### சாணக்கியனது சூழ்ச்சி

சந்திரகுப்தனுக்கு உறுதிகூறி வெளிச்சென்ற சாணக்கியன், தன்னுடன் பள்ளியிற் சேர்ந்து படித்தவனும், மந்திர ஜோதிடநீதி சாஸ்திரங்களில் வல்லவனும் தனது ஆப்த மித்திரனுமான இந்துசர்மனிடஞ் சென்று, மௌரியனும் மௌரிய புத்திரர் தொண்ணூற்றென்பதின்மரும் நந்தர்களால் அநியாயமாய் மடிந்த வரலாற்றினையும், சந்திரகுப்தன் சரித்திரத்தினையும், தான் அந்நந்தர்களால் அவமானஞ் செய்யப்பட்டுச் சபதஞ் செய்துவந்த விவரத்தினையும் எடுத்துக் கூறித் தனக்கு இது விஷயத்தில் உதவிபுரியும்படி அவனை வேண்டினன்.

அவன், சாணக்கியனிடம் பக்தியும் விசுவாசமும் மிகுதியுமுடையவனாதலால், சாணக்கியனைப் பார்த்து, "எனது அரிய நண்ப! என்னை வேண்டுதலும் வேண்டுமோ?

'உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு'

ஆதலின், உனக்கு என்னாலாகும் உதவியை எப்பொழுதுஞ் செய்யக் காத்துக்கொண் டிருக்கிறேன். இக் காரியத்தில் எனக்குள்ள பணி யாது? அதனைத் தெரிவிப்பாய்" என்றனன்.

நண்பன் இந்துசர்மன் இவ்வாறு கூறியதற்குச் சாணக்கியன் மிகவும் மகிழ்ந்து, அவனை நோக்கி, "நட்பின் தருமமறிந்த நன்னண்ப! நீ இப்பொழுதே பௌத்த சந்நியாசி வேடந் தரித்துப் பாடலிபுத்திர மடைந்து, நவநந்தர்களிடமும் மந்திரி இராக்ஷஸனிடமும் உன்னுடைய மந்திர சக்தியைக் காட்டிச் சில மாயங்களைச் செய்து அவர்களை மயக்குவித்துக் கபட சிநேகம் செய்துகொள். அதன்பின் அரசாங்க சம்பந்த

மான எல்லா இரகசியங்களையும் உனது உண்மை மாணவர்கள் மூலம் எனக்கு அறிவித்துக்கொண்டிரு. இதுவே நான் உனக்கிடும் பணி'' என்றனன்.

இந்துசர்மன், தன் நண்பன் கூறியபடியே, பௌத்த சந்நியாசி வேடம் பூண்டு, கையில் மயிற்கற்றை தாங்கிக் காலில் பாதக்குறடு தரித்து, எவரும் தன்னைக் கண்டு வணங்கும் வண்ணம் நடந்து பாடலிபுத்திரநகர்க்குள் நுழைந்தனன். ஆண்டுள்ளோரெல்லோரும், இவன் போலி பௌத்த சந்நியாசி யென்றுணராமல், உண்மையான பௌத்த துறவியேயென நினைத்து, அவன் பாதங்களில் விழுந்து அவனைப் பல விடயங்கள் கேட்டனர். இந்துசர்மன், மந்திர ஜோதிஷ நீதி சாஸ்திரங்களில் வல்லவனாதலின், அவர்களெல்லோரும் கேட்டுப் பிரமை யடையும்படி பல விஷயங்கள் சொல்லியும், கண்டு திகைக்கும்படி மந்திர சக்தியினால் பல மாயங்களைக் காட்டியும் வந்தனன். அதனால் அந்நகரினுள்ளோ ரெல்லோரும் "இவர் பெரிய மகான்; இவர் பல சித்து வித்தைகளைக் கற்றவர்; முற்றத் துறந்த முனிவர்" என்று பலவாறு கூறி அவனைப் புகழ்ந்தனர். அந்நகர் முழுவதும் அப்போலி சந்நியாசியின் பேச்சே பெரிதாயிருந்தது.

அப்பொழுது மந்திரி இராக்ஷஸன், அரச புத்திரர்கள் அந்தணனைத்தமனை அவமானஞ் செய்ததையும், அவன் சபதங்கூறிப் போந்ததையும், நவநந்தர்களுக்கு அதனால் வரக்கூடிய கேட்டினையுங் குறித்து விசாரமுடையவனானான். அவன் அவ்வாறு விசாரங் கொண்டிருக்கின்ற காலையில் பௌத்த சந்நியாசியின் பெருமை அவன் செவிக்கெட்டியது. அதைக் கேள்விப்பட்ட மந்திரி, 'எப்பொழுதும் பௌத்தர்களுக்கும் பிராமணர்களுக்கும் விரோதமுண்டு. பௌத்த சந்நியாசிகள் மந்திர தந்திரங்களில் கைதேர்ந்தவர். ஒருகால் பிரதிக்ஞை செய்து சென்ற பிராமணனால் மந்திர சம்பந்த

மான கெடுதிகள் வருமாயின், அதற்குப் பௌத்த சந்நியாசி யின் துணையிருத்தல் அவசியம்' என்று தனக்குள் கருதி அச்சந்நியாசியைத் துணைகொள்ள அவனை நாடிச் சென்ருன்.

அங்ஙனம் கருதிச் சென்ற இராக்ஷஸன் பௌத்த சந்நி யாசியைக் கண்டு "முக்குற்றந்துறந்த முனிவரே, தாங்கள் யார்? தங்கள் திருநாமம் எது?" என்று கேட்டான்.

பௌத்த சந்நியாசி :—ஐயா, நான் ஒரு பௌத்த சந்நியாசி. என்னை எல்லோரும் ஜீவசித்தி என்று அழைப்பர். எனக்கு மந்திர சாஸ்திரங்களில் மகா பாண்டித்தியம் உண்டு.

இராக்ஷஸன் :—எம்மடிகளே! சின்னுட்களுக்குமுன் ஒரு பிராமணன் வந்து நந்தர்களை நாசஞ் செய்வதாகச் சப தங் கூறிப் போயிருக்கின்ருன். அவன் ஒருவேளை அபி சாரப் பிரயோகஞ் செய்து நந்தர்களுக்குத் தீங்கு விளை விப்பானேவென்று அஞ்சுகின்றேன். இது விஷயத் தில் தங்கள் துணையை நாடி இங்கு வந்தனன்.

அமாத்திய இராக்ஷஸன் இவ்வாறு கூறியதும், ஜீவசித்தி அவனைப் பார்த்து, "ஐய! நீர் விப்பிரனைக் குறித்து வீணே பயங்கொள்ளவேண்டாம். அபிசார வித்தையில் எனக்குச் சமமாவார் எவருமிலர். ஒரு நிமிஷத்திற்குள் எப் பேர்ப்பட்ட அபிசாரப் பிரயோகத்தையும் நான் நீக்கவல் லேன். எனது திறமையைச் செய்கையிற் பார்க்கலாம்" என்று கூறி அவனை மயக்குவித்தனன்.

இராக்ஷஸன், இவன் கூறிய மொழிகளில் மயங்கி, 'சமய சஞ்சீவியாய் வந்து தோன்றிய சாமியே! எங்கள் அரசரு டைய அரண்மனைக்கு எழுந்தருளி எப்பொழுதும் எங்கள் அருகிருந்து துணை புரியவேண்டு'மென்று வேண்டிக்கொண் டனன். ஜீவசித்தி அதற்குடன்பட்டு அவன் பின் சென்று

அரண்மனையிலிருந்து சகல விஷயங்களையும் கவனித்து வந்தனன்.

ஒருநாள், ஜீவசித்தி, நவநந்தர்களுக்கு மந்திரப் பிரயோகம் செய்து அவர்களுக்குச் சுரநோயை யுண்டாக்கினன். அவர்கள் அந்நோயினல் வருந்தும்பொழுது ஒரு தேவதையை யுண்டாக்கிக் காட்டி, "இதோ பார்த்தீர்களா! உங்கள் மீது கோபித்துச் சென்ற விப்பிரன் மந்திர சக்தியினுல் ஒரு தேவதையை அனுப்பியிருக்கின்றான் இத்தேவதையே உங்களுக்கு இந்நோயை யுண்டாக்கிற்று. இதனை நாம் கவனிக்காது விட்டோமானல் இது பல துன்பங்களியற்றும். இப்பொழுதே இத்துர்த் தேவதையை மாயச் செய்கின்றேன், பாருங்கள்" என்று தன் கையிற் பற்றியிருந்த மயிற்கற்றையைச் சுழற்றி, அம்மாயத் தோற்றத்தை மறையச் செய்தனன்.

நிதரிசனமான இச் செய்கையைக் கண்டு நந்தர்களும் மந்திரியும் அதிசயித்து, 'இனி நாம் ஜீவசித்தியைக் கைவிடக்கூடாது. ஜீவசித்தியே நமது ஜீவன்களைக் காக்கவல்லவன்' என்று அவனைப் புகழ்ந்து, அவன்மீது மாருத விசுவாசமும் நம்பிக்கையும் வைத்து, அவனிடத்தில் அரசாங்க சம்பந்தமான எல்லா மர்மங்களையுங் கூறி வந்தனர். அதனல் ஜீவசித்திக்கு அவர்கள் மர்மங்களை அறிவது வெகு எளிதாயிற்று.

ஜீவசித்தி இங்ஙனமிருந்து வருகையில், ஒரு நாள், சந்திரகுப்தனை நந்தர்களிடமிருந்து விடுவிக்க ஒரு சூழ்ச்சி செய்து, நந்தர்களை யணுகி அவர்களைக் கண்டு, "அரச குமாரர்களே! சந்திரகுப்தன் இப்பட்டணத்திலிருக்கிற வரையில் உங்களுக்குக் கெடுதியேயன்றி நன்மையில்லை. அவனை இந்நகரத்தின்றும் நீக்கிப் பத்து யோசனை தூரத்திலுள்ள வர்த்தமானமென்னும் கிராமத்தில் வசிக்கும்படிச் செய்யுங்கள்"

என்றனன். அவர்களும் அவன் சொற்படியே அவன் தந்தை சொத்துக்களை அவனுக்குக் கொடுத்து அவனைக் கிராதராஜ்ய சமீபத்திலுள்ள வர்த்தமான கிராமத்திற்போய் வசிக்கச் செய்தனர். அவனும் அக்கிராமத்திற்குச் சென்று அதற்குச் சமீபத்திலுள்ள கிராதராஜ்ய அதிபதியைக் கண்டு தன்தந்தை சொத்து முழுவதையும் அவனிடம் ஒப்புவித்தனன். அவ்வதிபதியும் சந்திரகுப்தன் செய்யும் முயற்சிகளுக்குத் துணை புரிந்து அவனை ஆதரித்துவந்தான். அப்பொழுது சந்திர குப்தனுக்குச் சாணக்கியன் சகாயத்தினல் அவன் தந்தை மித்திரர்கள் அநேகர் துணையானர்கள்.

பின்பு, சாணக்கியன், இந்துசர்மனை விட்டு வெளிக் கிளம்பி, பாடலிபுத்திரத்திற்கு வடபாரிசத்தில் நூறுயோசனை தூரத்திலுள்ள பர்வதப்பிராந்திய அதிபதியாய் விளங்கும் பர்வதேஸ்வர அரசனைக் கண்டு, தனது புத்தி பலத்தால் அவன் தன்னை மதிக்குமாறு செய்து, அவனிடம் நந்தராஜர்கள் தனக்குச் செய்த அவமானத்தையும், தான் நந்த ஸம்ஹாரஞ் செய்து சந்திரகுப்தனுக்கு முடிசூட்டுவதாகச் சபதங் கூறி வந்ததையும் எடுத்துக்கூறி, "நீ படைகளுடன் வந்து நந்தர்களைக் கொன்று எனக்குச் சகாயம் புரிவையேல் உனக்கு அந்த இராஜ்யத்தில் அர்த்தபாகத்தைக் கொடுக்கின்றேன்" என்முன். அதுகேட்டு பர்வதேஸ்வரன், தனது சகோதரன் வைரோதகனையும் பிள்ளை மலயகேதுவையும் ஒரு இரகசிய மான இடத்திலழைத்து, "இப்பொழுது நம்மிடத்தில் வந்திருக்கும் பிராமணன் சாஸ்திர சம்பன்னன்; பகைவர் மர்ம மறிந்தவன்; எடுத்த காரியத்தைச் சாதிக்கும் வன்மையுடையவன். இவற்றையெல்லாம் அவன் முகப்பொலிவும் பேசும் வார்த்தைகளும் காட்டுகின்றன. அவன் இப்பொழுது நந்த ஸம்ஹார நிமித்தம் நமது துணையை நாடி வந்திருக்கின்முன். நாம் துணை புரிந்தால் நமக்கு அவ்விராஜ்யத்தில்

அர்த்தபாகத்தைக் கொடுப்பதாகக் கூறுகின்றான். அங்ஙனம் கிடைக்கும் அர்த்தபாகத்தை வைத்துக்கொண்டு, பின்பு மெல்ல மெல்ல மௌரிய புத்திரன் அனுபவிக்கும் அர்த்த பாகத்தையும் கைப்பற்றிக்கொள்ளலாம். கடைசியில் நமக்கு வெகு சுலபமாய் மகதநாடு முழுவதும் வசமாய்விடும்" என்று அவர்களுக்குக் கூறினன். அவர்களும் "அவ்விப் பிரனுக்குத் துணை போவோம்; முடிவில் தாங்கள் கருதி யபடியே அந்நாட்டையும் அகப்படுத்திக் கொள்ளுவோம்" என்றனர்.

அவர்கள் அங்ஙனம் கூறியதும், பர்வதேஸ்வரன், தனது மந்திரியைக் கொண்டு தனக்குக் கீழுள்ள சிற்றரசர்களுக் கெல்லாம் ஓலை போக்கிப் படைதிரட்டி, தனது புத்திரனுட னும் சகோதரனுடனும் நந்தர்களது இராஜ்யத்தை நோக்கி யுத்தப் பிரயாணம் செய்வானாயினன்.

இஃதிங்ஙனமாக, சாணக்கியன், பர்வதேஸ்வரன் படைக ளுடன் நந்தர்கள்மீது இன்ன காலத்தில் போருக்கு வருவதாக இருப்பதாகக் குறிப்பித்துப் பௌத்த சந்நியாசிவேடந் தரித் திருக்கும் தனது நண்பன் இந்துசர்மனுக்குச் சாரர்கள் மூலம் தெரிவித்தனன். இதை யறிந்த க்ஷபணகன் நந்த சேனாதிபதி கள் ஒவ்வொருவரையும் தனித்தனி கண்டு, "இப்பொழுது கோள்களின் நிலை வக்கிரமாயிருக்கிறது. நமது அரசர்மீது ஆடி மாதம் கிருஷ்ணபக்ஷம் கூடிய செவ்வாய்க்கிழமையன்று பகையரசர்கள் போர் தொடுத்து இந்நகரினை முற்றுகையிட வருகின்றார்கள். அப்பொழுது நீங்கள் யுத்தத்திற்குப் போ கக் கூடாது. போவீர்களேயானால் அந்தயுத்தில் நீங்கள் நிச்சயம் மடிந்துவிடுவீர்கள். உங்களுக்கும் அக்காலத்தில் தான் அனிஷ்டம் உதயமாகிறது" என்று அவர்களுக்குக் கூறிப் பயமுறுத்தி அவர்களைப் போர் முயற்சியில் தலையிடா வண்ணம் செய்தனன்.

## அத்தியாயம் 7

### நந்த ஸம்ஹாரம்

சாணக்கியன் பர்வதேஸ்வரனது திரண்ட சேனைகளுடன் சந்திரகுப்தன் வசிக்கும் கிராமத்தை வந்தடைந்தனன். சந்திரகுப்தன் அப்பெருஞ் சேனைகளைக் கண்டு களிகூர்ந்த பின்பு, தனக்குதவியாய்ப் படைகள் அனுப்புவதாகச் சொன்ன கிராதபதியைக் கண்டு பெரும்படை திரட்டிக்கொண்டனன். அவ்விருவகைப் படையில், பர்வதேஸ்வரனும் சாணக்கியனும் ஒரு பக்கமும், சந்திரகுப்தனும் கிராதபதியும் ஒரு பக்கமுமாக இருந்து சேனைகளை நடத்திக்கொண்டு பாடலிபுத்திரநகரையடைந்து அதனை முற்றுகையிட்டனர். நந்தர்கள் இதையறிந்து, தங்கள் சேனாதிபதிகளுக்கெல்லாம் பகைவர் வருகையை அறிவித்து அவர்களைச் சேனைகளுடன் போர்முகம் போய்ச்சேர உத்தரவிட்டனர். அவர்களெல்லோரும் ஜீவசித்தியின் வார்த்தையில் அதிக நம்பிக்கைகொண்டு, நந்தர்கள் உத்திரவின்படி உடனே போர்முகஞ் செல்லாமல், சில போக்குகள் காட்டிக் காலதாமதஞ் செய்து வந்தனர்.

அதற்குள் பர்வதேஸ்வரன் கிராதபதிகளின் சேனைகள் பாடலிபுத்திர நகருக்குள் நுழையத் தலைப்பட்டன. அதையறிந்த நவநந்தர்களும் இராக்ஷஸனும் இனி காலதாமதஞ் செய்வது அபாயத்திற் கிடமாமென ஆலோசித்து, அப்பொழுது ஆயத்தமாயிருந்த கொஞ்சம் சேனைகளை இரண்டு பாகமாக வகுத்து, ஒரு பாகத்தை இராக்ஷஸனும் மற்றொரு பாகத்தை நவநந்தர்களும் கூட்டிக்கொண்டு போர்முகத்திற்குச் சென்றார்கள்.

அங்ஙனம் இராக்ஷஸன் தனக்குத் துணையாக வந்த படைகளை யழைத்துக்கொண்டு சந்திரகுப்தனிருக்கும் போர்முகத்

தையடைந்ததும், சந்திரகுப்தனுடன் வந்திருக்கும் பெரும் படையைக் கண்டு, 'இச்சிறுபடையினுல் அப்பெரும்படை யை வெல்லுதல் கூடாத காரியம். இப்பொழுது ஒரு தந்தி ரஞ்செய்து இப்போரை நிகழாவண்ணம் நிறுத்திப் போட வேண்டும்' என்று தனக்குள் சிந்தித்துக்கொண்டு, சந்திர குப்தன் சமீபமடைந்து அவனைக் கண்டு, "இராஜபௌத்தி ரனே! உனக்குள்ள இராஜ்ய பாகத்தை நவநந்தர்களிடமிருந்து வாங்கித் தருகின்றேன். நவநந்தர்களும் நீயும் ஒரு அரச னின் புத்திர பௌத்திரர்கள்தானே. நீங்கள் உங்களுக்குள் விரோதித்துப் போர் செய்வது பகைவர்க்கு இடங்கொடுத் தற்கே யாகும். 'பகைவருக் கிடங்கொடேல்' என்பது நீதி சாஸ்திரம். நீ இதை யுணர்ந்து தக்கபடி நடந்துகொள்வா யானுல் உன்னைப் பலரும் புகழ்வார்கள்" என்று விநயமாகக் கூறிப் போரை நிறுத்த வேண்டினன்.

அப்பொழுது சந்திரகுப்தன் இராக்ஷஸன் கூறிய கபட மொழியைக் கேட்டுக் கோபங்கொண்டு, அவனைப் பார்த்து, "பாபியே! உன் கபட எண்ணங்களை நான் நன்கறிவேன். என்னிடம் உன் தந்திரமொன்றும் பலியாது. என் வீணே பேசுகின்ருய். என் முன் நின்று யுத்தம் செய்" என்றனன். அதன்பின் இராக்ஷஸன் 'இவனிடம் நமது சூழ்ச்சியொன் றும் பலியாது' என்று கண்டுகொண்டு போர் தொடங்கினன். அப்போரில் இராக்ஷஸனுடன் வந்த சேனைகளைக் சந்திரகுப் தன் முறியடித்து இலகுவில் ஓட்டி வெற்றி பெற்ருன்.

இது இங்ஙனமாக, பர்வதேஸ்வரன் சேனைகளை எதிர்க் கச் சென்ற நவநந்தர்கள் தங்களுக்குத் துணையாக வந்த சிறிது சேனைகளை வைத்துக்கொண்டு அப்பகைவீரர்களை எதிர்த்தனர். அப்பொழுது சாணக்கியன், பர்வதேஸ்வரன் சேனைகளுக்கு நாயகம்போல நின்றுகொண்டு, வீரர்களுக்கு உற்சாக வார்த்தைகள் கூறிச் "சிறிது சேனைகளுடன் வந்த

நந்தர்களின் சிரத்தைச் சீக்கிரத்தில் துணியுங்கள்'' என்றனன். அவ்வீரர்களும் கடல் மடை திறந்ததுபோல ஆரவாரித்துக் கிளம்பி நந்தர்களின் சேனைகளிடையே புகுந்து அவர்களைத் தாக்கிப் பின்பு நவநந்தர்களைச் சம்மரித்தனர்.

நவநந்தர்கள் நமனுலகடைந்ததும், சில வீரர்களோடி இராக்ஷஸனுக்கு இச்செய்தியை அறிவித்தனர். இராக்ஷஸன் இச்செய்தியைக் கேட்டு, இடியேறுண்ட நாகமென மனங் கலங்கி, மன்னன்மக்கள் மாண்ட அமர்க்களத்தைப் போய்ப் பார்த்தனன். அங்கே அரசகுமாரர்கள் ஒன்பதின்மரது அணிமுடி சிதறி அவனிமீது புரண்டுகொண்டிருந்தன. அவற்றைக் கண்டதும் அமாத்திய இராக்ஷஸன் அகங்குழைந்து வருந்தி ஒருவாறு மனந்தேறி, சர்வார்த்தசித்தியிருக்குமிடஞ் சென்று சாணக்கியன் மீது மறுபடியும் போர் தொடுக்க ஆலோசித்தனன். சர்வார்த்தசித்தி அவன்மொழி கேட்டு, 'இச்சொற்ப சேனை கொண்டு அப்பெருஞ்சேனையை எங்ஙனம் வெல்லுதல் கூடும்? இனி ஆகாத காரியத்தைப் பற்றி ஆலோசிப்பதில் பயன் என்ன?' என்று அதனை மறுத்துரைத்து ஒன்றுந் தோன்றாத சிந்தையனாய் ஓரிடத்தி லமர்ந்திருந்தனன்.

அவன் அங்ஙனமிருக்கும்பொழுது, நகரத்து மாந்தரெல்லோரும் சாணக்கியனையணுகி, "சுவாமி! அரசபுத்திரர்கள் இறந்ததும் நகரம் அராஜகமாயிற்று. தாங்கள் இதைக் கவனித்து இந்நகரத்தையும் எங்களையும் காப்பாற்றியருள வேண்டும்'' என்று பிரார்த்தித்துக்கொண்டனர். அதற்குச் சாணக்கியன் அவர்களைப் பார்த்து, "முடிமன்னன் அரசு விரும்பும் குடிமக்களே! நான் இப்பொழுது நகரத்தினுள் நுழைந்து நகரத்தைக் காப்பாற்றவே காத்துக்கொண்டிருக்கின்றேன். காவலனொருவனையும் கடிதில் நியமிக்கவே கருத்துக் கொண்

டிருக்கின்றேன். நீங்கள் கவலை கொள்ளற்க. ஆனல் இதற்கு விருத்தாப்பியனான சர்வார்த்தசித்தி இடைஞ்சலாக இருக்கின்றான். அவ்விருத்த பகைவனுக்கு எங்களுடன் போர்புரியச் சக்தியிருந்தால் வந்து போர்புரியட்டும். இல்லையேல் அவன் அடவி செல்லட்டும். அவனொருவனுக்காகத் தான் இப்பொழுது தாமதித்துக்கொண்டிருக்கின்றேன்'' என்றனன்.

இவ்விஷயத்தைச் சர்வார்த்தசித்தி யறிந்து இராக்ஷஸனுடன் சில ஆலோசித்துப் பின்பு நகர மாந்தரின் நன்மையை நோக்கி அடவிபோய்ப் புகுந்தனன். அவன் அங்ஙனம் அடவி புகுந்ததும், சாணக்கியன் சந்திரகுப்தனுடன் நகருள் பிரவேசித்து வெற்றி முரசை முழக்குவித்தனன்.

அப்பொழுது இராக்ஷஸன், "நம்மீது அதிகப்பிரியமுள்ள நவநந்தர்களை அநியாயமாக இழந்துவிட்டோம். நமக்கு இனி இந்நாட்டில் என்ன செல்வாக்கு இருக்கின்றது? நமது ஆலோசனையைக் கேட்டு அதன்படி நடக்கிறவர்கள் இங்கு யாரிருக்கிறார்கள்? மிக்க விசுவாசமுள்ள நற்றலைவர்களை யிழந்த நான் மேதினியிலிருந்து என்ன பிரயோசனம்? அவர்கள் சென்ற வழி நானும் செல்லலாமென்றாலோ அது ஒரு பெண்பாலின் செயலைப் போலாகும். அதுவும் செய்யத்தக்கதன்று. எஃதெங்ஙனமாயினும், உயிருடனிருந்து நமது தலைவர்களின் பகைவர்களை நாசஞ்செய்து, நந்தகுல விருத்திக்குக் காரணராய் விளங்கும் சர்வார்த்தசித்தி மன்னனுக்கு முடிசூட்டிப் பழிதீர்க்கலா மென்றாலோ, இப்பெருங்காரியம் ஒருவனல் ஆகக்கூடாத காரியமாயிருக்கிறது? ஆனல் புத்திமான்களால் ஆகாத காரியம் உலகத்தில் ஒன்றுமில்லை. எதற்கும் நமது புத்தி பலத்தை உபயோகித்து எதிரி பலத்தைத் தாக்கிப் பார்ப்போம். கடைசியில் நமது கர்மபலன் போல் யாவும் நடக்கட்டும்'' என்று தனக்குள் ஆலோசித்து, தங்

திரத்தால் சந்திரகுப்தனைக் கொல்வதற்கு அவனிடம் அமைச்சனுயமர அவனை நாடிச் சென்றனன்.

அது சமயம், சந்திரகுப்தன் சாணக்கியனோடிருந்து, "நமக்கு முக்கியமான பகைவர்களெல்லோரும் ஒழிந்தார்கள். இனி நமக்குப் பகைவர்களைப் பற்றிய கவலையில்லை. ஆயினும் அமாத்திய இராக்ஷஸனைப்பற்றி மாத்திரம் சிறிது கவலை கொள்வதற்கிருக்கிறது. அவன்பல தந்திரங்களைக் கற்றவன். அவனைச் சாமானியனென்று கருதி 'வாளாவிருத்தல் கூடாது" என்று தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது, இராக்ஷஸன் ஆங்கடைந்து சந்திரகுப்தனை வணங்கி, "நந்தகுலம் விளங்கவந்த நராதிபனே! நான் இதுவரையில் தங்கள் பாட்டனாரிடமும் அவர் குமாரர்களான நவநந்தர்களிடமும் அமைச்சனுயிருந்து காலங்கழித்தேன். கடைசியில் அவர்கள் காலகதியினால் இக்காசினியைத் துறந்துவிட்டனர். அவர்கள் அங்ஙனமாகியும் எஞ்சியிருக்கும் நான் எவரிடம் அணுகிக் காலத்தைத் தள்ளுவதென்று ஆலோசித்தேன். நந்தகுலத்திற்குழைத்த நான், என் அந்திய பருவத்தில் வேறொருவரிடம் உழைப்பதா என்றெண்ணினேன். அவ்வெண்ணத்தில் நந்தகுலத்தின் நாயகமாய் விளங்கும் தங்கள் நினைவு தோன்றிற்று. அது தோன்றியதும் என்மனம் ஆறுதலடைந்து, தங்களைக் காணத் தூண்டிற்று. அதன் தூண்டுதலின் படியே உமது சமுகம் வந்தேன். எனக்கு நந்தர்களும் தாங்களும் சமமே. வித்தியாசம் பாராட்டேன். நந்தர்கள் இதுவரை என்னை அன்புடன் ஆதரித்ததுபோலத் தாங்களும் ஆதரிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்" என்று ஈனசுரத்துடன் கூறி நின்றனன்.

சந்திரகுப்தன், இராக்ஷஸனுடைய சூதுவாதெல்லாம் நன்கறிந்தவனாதலால், அவன் மொழியில் சிறிதும் நம்பிக்கை கொள்ளாது, 'சாணக்கியனது முகத்தைப் பார்த்தனன்.

சாணக்கியனே சாகஸத்திற் சதுரனாதலின், அவன் இராக்ஷஸ னுடைய தந்திரங்களை நன்கறிந்து, 'நாம் சந்திரகுப்தனிடம் இருக்கிறவரையில் இவனுடைய தந்திரமொன்றும் பலியாது. ஆயினும் இவன் என்னதான் தந்திரங்கள் செய்கிறான் என் பதைக் கண்டறிவோம்' என்று தனக்குள் கருதி, அவனை அமைச்சனாயமர்த்திக் கொள்ளலாமென்ற குறிப்பை முகத் தாற் காட்டினன். சந்திரகுப்தன், அக்குறிப்பை யறிந்து இராக்ஷஸனை நோக்கி, "உனக்கு அவ்வாறு கருத்து இருந்தால் எமக்கு அமைச்சனாயிருந்து துணைபுரிவாய்" என்றனன். இராக்ஷஸனும் அங்ஙனமே துணைபுரிகின்றேன் என்று இசைந்து அமைச்சற்றொழிலைப் பார்த்து வந்தனன்.

---

## அத்தியாயம் 8

### இராக்ஷஸனுடைய சூழ்ச்சிகள்

இராக்ஷஸன் சந்திரகுப்தனிடம் அமைச்சனா யமர்ந்த பின்பு, இரகசியமாகச் சிற்பியினிடமும், வைத்தி யனிடமும், கம்மாளனிடமும் அதிகப் பொருள்கொடுத்துச் சூழ்ச்சியால் விஷங்கலந்த ஔஷதப்பிரயோகத்தாலும், விஷந்தீட்டிய ஆயுதப் பிரயோகத்தாலும் முறையே அவ னைக் கொல்லுவிக்கத் திட்டஞ்செய்தான். அவர்களும் அவன் திட்டத்திற்கு உடன்பட்டுச் சந்திரகுப்தனைக் கொல் லத் தக்க சமயத்தை எதிர்பார்த்து வந்தார்கள்.

அம்முயற்சி அங்ஙனமிருக்க, இராக்ஷஸன் வனஞ் சென்ற சர்வார்த்தசித்திக்கும் தனக்கும் இரகசியமாக விஷ யங்கள் அறிவித்துவரச் சில சாரர்களை ஏற்படுத்திக் கொண் டான். அவர்கள் மூலமாக மௌரியபுத்திரனை வதஞ்செய் யச் சர்வார்த்தசித்திக்குச் சமாசாரம் சொல்லி யனுப்பினான்.

சாரர்களும் வனஞ்சென்று சர்வார்த்தசித்திக்கு இராக்ஷஸன் கூறிய இரகசிய விஷயங்களைப் புகன்றனர். அதைக் கேட்டு அவ்விருத்தாப்பிய மன்னன், இராக்ஷஸன் தனக்காகச் செய்யும் முயற்சிக்கு மிக மனமகிழ்ந்து, அவன் கூறியனுப்பிய வண்ணமே வனத்திலுள்ள சில நச்சுக் கனிகளைப் பறித்து அவைகளைச் சாரர்களிடம் கொடுத்து, "சாரர்களே! நீங்கள் சந்திரகுப்தனைக் கண்டு, 'உமது பாட்டனாராகிய சர்வார்த்தசித்தி மன்னன் சகல பற்றுக்களையும் ஒழித்து முனிவராகிக் காட்டிலுறைகின்றார். நாங்கள் அவர் ஏவல்செய்யும் சிஷ்ய கணங்கள். அவர், தாங்கள் மகதநாட்டு மன்னனானதற்குச் சந்தோஷித்து, இக்கனிகளைத் தங்கட்குப் பிரசாதமாக அளித்தார். இவற்றைப் பெற்றுப் புசித்தால் தங்கட்குப் பூரண ஆயுளும் புத்திரசந்தானமும் பெருகும்' என்று கூறி, இக்கனிகளை அவனிடம் கொடுங்கள்" என்று ஆஞ்ஞாபித்து அனுப்பினன்.

சாரர்கள் அக்கனிகளைப் பெற்றுப் பாடலிபுத்திர நகரை நோக்கி நடக்கலானார்கள். இங்ஙனம் சாரர்கள் சர்வார்த்தசித்தி மன்னனிடமிருந்து நச்சுக் கனிகளைப் பெற்று வருகிறார்கள் என்ற செய்தியைச் சாணக்கியன் இந்துசர்மனாலறிந்து, இதனின்றும் சந்திரகுப்தனைக் காக்க ஆலோசித்துத் தனக்கு உண்மையாய் நடக்கும் சாரர்களை யழைத்து, அவர்களிடம் நற்கனிகளைக் கொடுத்து, வனத்திலிருந்து நச்சுக்கனிகள் கொண்டுவரும் சாரர்களின் வரலாற்றை அறிவித்து, 'இக்கனிகளைக்கொண்டு அக்கனிகளைப் புத்திசாலித்தனமாக மாற்றிக்கொண்டு வரவேண்டும்' என்று ஆஞ்ஞாபித்து அனுப்பினன். அவர்களும் வனசரிதர்கள்போல் வேடந்தரித்து வனத்திற்கேகிச் சாரர்கள் வரும் வழியை நோக்கிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது சர்வார்த்தசித்தி மன்னன் அனுப்பிய சாரர்கள், கனிமூட்டையைக் கட்டித் தோளிற்

போட்டுக்கொண்டு, சந்திரகுப்தனைக் கண்டு இது பேசவேண்டும், அது பேசவேண்டும் என்று தங்களுக்குள் உரையாடிக் கொண்டு வந்தார்கள்.

அவர்கள் அங்ஙனம் உரையாடியதனால் சாணக்கியன் ஏவிய சாரர்கள், 'இவர்கள் தாம் நமது ஐயர் கூறிய சாரர்கள்' என்று நிச்சயித்து, அவர்கள் கண்ணிற்படாமல் மறைந்து அவர்களைப் பின்தொடர்ந்து சென்றார்கள். அங்ஙனம் செல்கின்றபோது, வனத்திலிருந்துவரும் சாரர்கள் வழி நடை இளைப்பினால் களைத்து ஒரு குளிர்ந்த மரத்தடியில் தங்கி நித்திரை செய்யலானார்கள். அப்பொழுது சாணக்கியனது சாரர்கள் இதுதான் தக்க சமயமெனக் கொண்டு, அவர்கள் சமீபமடைந்து, சந்தடி செய்யாது நச்சுக் கனிகளிருந்த மூட்டையை அவிழ்த்து, அதில் சாணக்கியன் தந்த நற்கனிகளை வைத்து நச்சுக் கனிகளை எடுத்துக் கொண்டு, அச்சாரர்கள் நித்திரை தெளிவதற்குள் அப்புறமேகிப் பாடலி புத்திர மடைந்தனர். ஆங்கடைந்து அவர்கள் சாணக்கியனைக் கண்டு, நச்சுக்கனிகளைக் கைப்பற்றிய விவரத்தைக் கூறி, அக்கனிகளை அவனிட மளித்துவிட்டுத் தங்களிருக்கைக்குச் சென்றனர்.

வனத்தில், மரத்தடியில் தங்கித் தூங்கி இளைப்பாறிய சாரர்கள், கண்விழித்தெழுந்து, கனிமூட்டையைத் தோளிற் போட்டுக்கொண்டு வழிநடந்து பாடலிபுத்திர நகரை நண்ணினர். ஆங்கடைந்து சந்திரகுப்தனைக் கண்டு, "மன்னர்பெருமானே! உலகப்பற்றுக்களை முற்றுந் துறந்த சர்வார்த்தசித்தி முனிவருக்கு நாங்கள் சிஷ்யர்கள். அவர் தாங்கள் இந்த மகதநாட்டுக்கு மன்னனாக வந்ததைக் குறித்து அகங்களித்துப் பிரசாதமாக இக்கனிகளை அளித்தார். தாங்கள் இதைப் புசித்தால் தங்களுக்குப் பூரண ஆயுளும் புத்திர சந்தானமும் நித்தியம் பெருகும்" என்று கூறிக் கனிகளை அவனிடம்

தந்தனர். அவன் அக்கனிகளைப் பெற்று அகமகிழ்வுடன் புசித்தனன்.

அப்பொழுது, அருகிருந்த அமாத்திய இராக்ஷஸன், ‘ நாம் செய்த சூழ்ச்சி பலித்தது. இன்னும் சிறிது நேரத்திற்குள் மன்னன் இறந்துபடுவான் ’ என்று தனக்குள் கருதினான். சந்திரகுப்தன் நற்கனிகளைப் புசித்ததனால் அவனுக்குத் தேகம் ஆரோக்கியமாயிருந்தது. அது கண்டு இராக்ஷஸன் ‘மன்னன் கனிகளைப் புசித்து நெடுநேரமாகியும் அவனை அக்கனிகள் மாய்த்திலவே. இது அவன் இயற்றிய ஊழ்வினை உறுதியோ, அல்லது சூழ்வினைச் செயலோ ” என்றெண்ணி ஏமாற்றமடைந்தான்.

ஏமாற்றமடைந்தும், அவன் மனந்தளர்வடையாது மற்றுமோர் சூழ்ச்சி புரியக் கருதி, பர்வதேஸ்வர மன்னனிடஞ் சென்று அவனைத் தனிமையிற் கண்டு, “ பார்த்திபனே ! சந்திரகுப்தன் சூத்திரகுல மாதுக்குப் பிறந்தவன். அவன் அரசுக்கு அருகனல்லன். மேலும் அவன் தங்களுதவியாலேயே இந்நாட்டைக் கைப்பற்றியிருக்கின்றான். இந்நாடு அவன் வசமாவதற்குத் தாங்களே பேருதவியாயிருந்திருக்கின்றமையால், இவ்வரசைத் தாங்களடைய உரிமையுடையவர்களாயிருக்கின்றீர்கள். எங்ஙனமாயினும், சந்திரகுப்தனை இரகசியமாகக் கொன்றுவிட்டால், இவ்விராஜ்ய முழுவதையும் தாங்களேயிருந்து தனியரசு செலுத்தலாம். தாங்கள் இந்நாட்டிற்கு இறைவனானால், சாணக்கியன் தானே ஓடிப்போகின்றான். அப்பொழுது நமக்குப் பகைவர் எவருமிலாது ஒழிந்துவிடுகின்றனர். பின்பு நானே தங்களுக்கு அமைச்சனாயிருந்து துணைபுரிகின்றேன் ” என்று ஆசை வார்த்தைகள் கூறி அவனைத் தன் பக்கம் இசைய வைத்தனன்.

பர்வதேஸ்வரன் மனதில் இவ்வெண்ணம் முன்னரே குடிகொண்டிருந்ததனால் இராக்ஷஸன் சூழ்ச்சிக்கு அவன் இலசகு

தது ஆச்சரியமல்ல. அவர்களிருவரும் இது விஷயமாகக் கலந்து பேசியபின், அவர்களுக்கு முன்னிலும் நட்பு அதிகமாயிற்று. இதனைச் சாணக்கியன் குறிப்பாலறிந்து அதற்கு வேண்டிய ஜாக்கிரதையுட னிருந்துவந்தனன்.

இஃதிங்ஙனமாக, இராக்ஷஸன், தனது ஆப்தமித்திரனுகக் கருதிவரும் ஜீவசித்தியை யழைத்து, "ஐயனே! எனது தலைவர்களை இத்தரணியிலிராவண்ணம் மாய்த்த பகைவனை சந்திரகுப்தனைப் பழிக்குப்பழி வாங்கக் கருதி எத்தனையோ சூழ்ச்சிகளைப் புரிந்துவருகிறேன். இது வரையில் அச்சூழ்ச்சிகளொன்றும் பலித்தில. ஆயினும் முயற்சியைக் கைவிடாது ஒன்றன்பின் ஒன்றாகக் காரியங்களைச் சூழ்ந்து செய்து வருகின்றேன். பலிக்கிறது பலிக்கட்டும். இப்பொழுது நீர் அபிசாரப் பிரயோகத்தினல் அவனைக் கொல்லக் கூடுமாயின், அதனைச் செய்து உதவி புரியலாமே" என்றனன்.

அதற்கு ஜீவசித்தி "அங்ஙனமே செய்கின்றேன்" என்று உடன்பட்டு, ஓரோமம் வளர்த்தி, மந்திர பலத்தினல் தேவ மாதரையும் வெல்லவல்ல அழகையுடைய அதிசுந்தரமான ஒரு மாதைச் சிருஷ்டித்து, அம்மாதை இராக்ஷஸனிடம் ஒப்புவித்து, அவனைப் பார்த்து, "அன்பனே! இம்மாதை எவனொருவன் தொடுகிறானே அவன் மரணமடைவான். இம்மாதும் அப்பொழுதே மாயமாய் மறைந்துவிடுவாள்" என்று தான் உண்டாக்கிய அம்மாதின் தன்மையைக் கூறினன்.

அதைக் கேட்டு இராக்ஷஸன், "சந்திரகுப்தனைக் கொல்ல இதுவே சிறந்த உபாயமாகும். இம்மாதோ, ஏந்திழையாரை எமதூதரென்றும், எவரையும் ஆட்டிவைக்கும் பைசாசமென்றும் கூறி வெறுத்துத் தவம் மேற்கொண்டொழுகும் முனிவருங் கண்டு மெச்சும் சுந்தரம் வாய்ந்தவளாயிருக்கின்றாள். இவளைக் கண்டு சந்திரகுப்தன் மயங்குவது ஓர்

ஆச்சரியமாகாது. இவளைக் கண்டாலே அவன் ஊனுறக்க மின்றி இரவும் பகலும் இவள் நினைவே மேற்கொள்ளுவன். இவளை அவனிடம் அழைத்துச் செல்லவேண்டும்'' என்று தீர்மானித்துக் கொண்டு, தக்க சமயம் பார்த்துப் பொற் பாவை போல்வாளைச் சந்திரகுப்தன் சமூகம் அழைத்துச் சென்று, அவனைக் கண்டு, "சுந்தரமன்ன! உன் சுந்தரத்திற் கேற்ற பேரழகு வாய்ந்த ஒரு கன்னிகா ரத்தினத்தைத் தேடிக் கொண்டு வந்திருக்கின்றேன். அப்பெண்ணருங் கலத்தை நீ யோருவனே அடைவதற்கு யோக்கியதை யுடையவன்'' என்று கூறி, அம்மாய மாதை அவன் முன் நிறுத்தினன்.

அம்மாதினியல்பை இந்துசர்மனால் முன்னரே அறிந்திருந்த சாணக்கியன், சந்திரகுப்தனைப் பார்த்து, "அரசகுமர! அணங்கையும் பழிக்கும் அழகு வாய்ந்த இக்காரிகையை நீ யடைதல் எவ்வளவும் நியாயமன்று. நமக்குப் பெருந்துணை யாயிருந்து உதவிபுரிந்து நல்வாழ்வளித்தவன் பர்வதேஸ்வரன். அவனுக்கே முதல் மரியாதை செய்யவேண்டும். அதை மறந்தால் நாம் நன்றி கொன்றவர்க ளாவோம்'' என்று கூறி, அப்பெண்ணணங்கைப் பர்வதேஸ்வரன்பால் சேர்ப்பித்தனன். சந்திரகுப்தனும் சாணக்கியன் குறிப்பறிந்து அதற்கிசைந்தாற் போல் நடந்துகொண்டனன்.

பர்வதேஸ்வரனோ, சாணக்கியன் மொழிந்த சாகஸ வார்த்தைக்கும், தன்னெதிரில் மின்னற் கொடிபோல் நின்ற கன்னல் மொழி மாதுக்கும் மயங்கி, அத்தையலை அகமகிழ் வுடன் ஏற்றுக்கொண்டனன்.

அமாத்திய இராக்ஷஸன், "இஃதென்ன விபரீதமாயிருக்கிறது! நாம் எந்தத் தந்திரஞ் செய்தாலும் ஏதும் பலியாமற் போகின்றதே. இதுவாவது நிச்சயம் பலிக்குமென்று பார்த்தேன். இதுவும் இவ்வாறாக வேண்டுமோ? பலிக்கா திருப்ப

தோடு, இது பல தீங்கினையல்லவோ இழைக்கக் கருக்கொண்டிருக்கிறது. முதலாவது, பகைவனுயிரை மாய்க்கவில்லை. இரண்டாவது, அந்தரங்க நண்பனுயிருந்த பர்வதேஸ்வரனை மாய்க்கிறது. மூன்றுவது, என்னை ஆபத்துக் குள்ளாக்குகின்றது" என்று தனக்குள் சிந்தித்துப் பெரிதும் கவலையுடைய மனத்தனுய்த் தன் இல்லம் அடைந்து தன்இல்லக்கிழத்தியைக் கண்டு தனக்குற்ற துன்பத்தைச் சொல்லி, அவளையும் மக்களையும் தன் பொருள்களையும் தன் உயிர்த்தோழனுய் விளங்கிய சந்தனதாசனிடம் அடைக்கலமாக ஒப்புவித்துப், பின்பு தான் முன்னமே சந்திரகுப்தனைக் கொல்ல ஏற்பாடு செய்து வைத்திருந்த சிற்பிக்கும், விஷ வைத்தியனுக்கும், ஆயுதங்கள் செய்யும் கம்மாளனுக்கும் அதிக பொருள் கொடுத்து அவர்களைத் தூண்டும்படி தனது கணக்கனுன சகடதாஸனிடம் ஆஞ்ஞாபித்துத், தான் மாத்திரம் அன்றிரவே தனிமையாகப் புறப்பட்டுப் புஷ்பபுரம் போய்ச் சேர்ந்தான்.

மறுநாள் காலை, பர்வதேஸ்வரன் பிணமாய்க் கிடப்பதையும், மாயமாது மறைந்ததையும், அவன் மகன் மலயகேதுவும், தம்பி வைரோதகனும் கண்டு பெருந்துக்கங்கொண்டனர். சாணக்கியனே பர்வதேஸ்வரன் மாண்டமைக்குப் பெருந்துயருற்றவன்போல் நடித்து, அவர்களைப் பார்த்து, "அன்பர்களே! இது தூர்த்தனுகிய இராக்ஷஸனுடைய வேலை. எங்களுக்குப் பேருபகாரியாயும், ஆப்தமித்திரனுமாயுமிருந்த பர்வதேஸ்வரனை அவன் பொறுமை கொண்டு கொன்றிருக்கின்றுன். அவனை இனிச் சும்மா விடுவதில்லை" என்று கூறி, அருகிலிருந்த ஏவலாளர்களை யழைத்து அவனைக் கையும் பிடியுமாகப் பிடித்து வரும்படி கட்டளையிட்டான்.

கட்டளைபெற்ற ஏவலாளர் கடிதிற் சென்று இராக்ஷஸன் இல்லத்தில் அவனைத் தேடிப் பார்த்தனர். அவன் வீட்டில் எவருமில்லாதது கண்டு, சாணக்கியனிடம் ஓடி, "தேவ

இராக்ஷஸன் வீட்டில் அவனாவது அவன் மனைவி மக்களாவது காண்கின்றிலர். அவர்கள் நேற்றிரவே எங்கேயோ சென்று மறைந்திருக்கின்றனர்" என்றனர். அதனைக் கேட்டுச் சாணக்கியன் அந்நகரத் துள்ளோர்க்குப் பர்வதேஸ்வரனை இராக்ஷஸனே கொன்றானென அறியும்படி முரசறைந்து தெரிவித்துத் தான் குற்றமற்றவனென விளங்கினான்.

அங்ஙனம் விளங்கிய சாணக்கியன் மலயகேதுவையும் வைரோதகனையும் தேற்றித் தம்மிருக்கைக்கு அனுப்பிய பின்பு, 'அர்த்தராஜ்யத்திற்கு அதிபதியாக இருந்த பர்வதேஸ்வரன் தொலைந்தான். இனி அதற்கு உரிமையுடையவர்களாயிருப்பவர்கள் அவன் மகன் மலயகேதுவும் சகோதரன் வைரோதகனுமே. இவர்களையும் உபாயத்தால் ஒழிக்க வழி தேடினால்தான் சந்திரகுப்தனுக்கு நாம் வாக்களித்தபடி இம் மகதநாடு முழுவதையும் அளித்து முடிசூட்ட முடியும். முதலில், மலயகேதுவைப் பேதித்து அவன் தன்னூர்ச் செல்ல வழிதேடவேண்டும். அதன் பின்பு வைரோதகனை இங்கேயே நிறுத்தி அவனையும் தந்திரத்தால் ஒழிக்குமார்க்கத்தைக் கண்டு பிடிக்கவேண்டும்' என்று தனக்குள் சிந்தித்து முடிவு செய்து கொண்டு, மலயகேதுவோடு கபட சிநேகஞ் செய்துகொண்டிருக்கும் பாகுராயணனிடஞ் சென்று அவனைப் பார்த்து, "பாகுராயணா! நீ மௌரியனிடத்திலும் அவன் புத்திரன் சந்திரகுப்தனிடத்திலும் ஆதிமுதல் இதுவரையில் அத்தியந்த பிரியம் வைத்திருக்கின்றாயென்பதை நானறிவேன். இப்பொழுது நீ, சந்திரகுப்தனின் நன்மையை உத்தேசித்து, நமது நாட்டிற்றங்கி அர்த்தராஜ்ய பாகத்திற்கு எதிர்பார்க்கும் மலயகேதுவினிடஞ் சென்று அவனைப் பேதித்து, அவனுக்கு நம்மீது அச்சமுண்டாகும் படிச் செய்து, அவனைத் தன் படைகளுடன் திரும்பிச் செல்ல வழி தேடவேண்டும். இதைச் செய்வதற்கு நீ தான் தகுதியுடையவன். உன்னை

அவனும் உண்மையான நண்பனென்று கருதியிருக்கின்ருறுதலால் உன் வார்த்தையில் அவன் மிக்க நம்பிக்கை வைத்து அதன்படிச் செய்வான்'' என்று கூறி, அவனை மலயகேதுவினிடம் போகச் செய்தனன்.

பாகுராயணனும் சாணக்கியன் கூறியதற் கிசைந்து மலயகேதுவினிடஞ் சென்று, அவனைக் கண்டு, "நண்ப! நீ உன் தந்தையை இழந்ததற்கு நான் மிகவும் வருந்துகிறேன். உன் தந்தை இறந்ததற்குக் காரணன் இராக்ஷஸ னென்று இவ்வூரார் கூறுகின்றனர். சாணக்கியனும் அவ்வாறே கூறுகின்ருன். நான் அதை நம்பவில்லை. இதற்குக் காரணன் சாணக்கியனே என்று நான் திட்டமாய்ச் சொல்வேன். அவனே உன் தந்தையை மாயஞ்செய்து கொன்றிருக்கின்ருன். அவன் அங்ஙனம் கொல்வதற்குக் காரணமென்னவெனில், முன் உன் தந்தைக்குப் பாதி நாடு அளிக்கின்றேன் என்று கூறியமையே யாகும். அவனே உன் தந்தை செய்த நன்றியையும் மறந்து இவ்வாறு செய்திருக்கின்ருன். அவனை இனி நீ மித்திரனென்று நம்பி இங்கிருத்தல் தகாது. உன் தந்தையைக் கொன்ற அவன் உன்னையுங் கொல்ல வழிதேடியிருப்பான். உனக்கு எந்தச் சமயத்தில் என்ன தீங்கு வருமோ வென்று கருதியே நண்பனுன நான் ஓடிவந்து இதனைத் தெரிவித்தேன். நீ ஒரு கணமும் தாழ்த்தாமல் இன்னே உன் சேனையை அழைத்துக்கொண்டு உன்னாடுபோய்ச் சேர்வாய்'' என்று நவின்றனன்.

அதைக் கேட்டு மலயகேது, 'நமது தந்தையைச் சூழ்ச்சியினுல் கொன்றவர்கள் நம்மையும் உபாயத்தினுல் கொல்வார்கள் என்பதிற் சிறிதும் ஐயமில்லை. நண்பன் பாகுராயணன் நவின்றது யாவும் உண்மையே. இதுவரையில் மித்திரன்போல் நடித்து வந்த அச்சாணக்கியன் நமக்கு இனி பெருஞ் சத்துருவேயானுன். 'அவனைப் பழிக்குப் பழிவாங்

குகிறேன்' என்று தனக்குள் சிந்தித்து முடிவுசெய்துகொண்டு, தனது நால்வகைப் படையுடன் தன் நகரை நண்ணினுன்.

அவன் அங்ஙனஞ் சென்றபின், [illegible]னுடைய சகோதரன் வைரோதகனுக்குச் சாணக்கியன் சில ஆசை வார்த்தைகள் கூறி அவனைத் தன் வசப்படுத்திக்கொண்டனன். அவனும், பாதி இராஜ்யத்தைத் தானே அடையலாம் என்ற விழைவினுல் அங்கேயே வசித்துவந்தான்.

அவன் அங்ஙன மிருக்க, பாடலிபுத்திரத்தி னின்றும் வெளிப்போந்த இராக்ஷஸன், மலயகேது தன் நகரை வந்தடைந்தனன் என்று கேள்வியுற்று, அந்நகரை நாடிப்போய் அவனைக் கண்டு, "மித்திர ! எனது அரிய தலைவர்களைப் படுபாவியான அந்த விப்பிரன் அநியாயமாய் அழித்துவிட்டான். அதுவும் போதாமல் எனக்கு ஆப்த மித்திரனுய் விளங்கிய நினது தந்தையையும் மாய்த்துவிட்டான். அவன் மிகக் கொடியன். அவனையும் அவன் துணைவன் சந்திரகுப்தனையும் கொன்று அம்மகத நாட்டை நினக்கே முடிசூட்டி வைக்கின்றேன். நீ மாத்திரம் உனது படைகளைத் திரட்டி அதற்கு நாயகமாக நின்று என்னுேடு வா. நான் எல்லாவற்றிற்கும் முன் நின்று உனக்கு வெற்றியையுண்டாக்குகின்றேன்" என்று அவனுக்கு விருப்பமான சில வார்த்தைகள் கூறினன்.

அவன் இராக்ஷஸன் மொழி கேட்டு, தனக்குள், 'இராக்ஷஸன் மிகுந்த சமர்த்தன் என்பதில் யாதோரையப்பாடுமின்று. அவன் அரச தந்திரம் மிகவும் அறிந்தவன். அவன் சொற்படி கேட்டு நடந்தால் வெற்றியுண்டாவது நிச்சயம்' என்றெண்ணி, அவனைப் பார்த்து "அமாத்திய இராக்ஷஸ ! நானும் நீ கூறியபடியே அவ்விருவர்களையுங் கொன்று அம்மகத நாட்டைக் கைப்பற்ற எண்ணியுள்ளேன். எனது அரிய தந்தையைக் கொன்ற அச்சாணக்கியனை அந்த

கனுலரு அனுப்பாமல் என் தந்தைக்குச் செய்யவேண்டிய பரலோக கிருத்தியங்களையும் செய்யேன்'' என்று பிரதிக்ஞை கூறிப், பின்பு இராக்ஷஸனைத் தனக்கு மந்திரியாக அமைத்துக் கொண்டு, அவன் வசம் தனது நாட்டிலுள்ள எல்லாச் சேனை களையும் ஒப்புவித்து அவற்றை யுத்தத்திற்கு ஆயத்தமாக்கும் படிச் சொன்னான். இராக்ஷஸனும், அவ்விரர்களைத் தன் கட்டளைக்குக் கீழ்ப்படியச் செய்து, போர் புரிவதற்கான உபாயங்களை அவர்களுக்கு எடுத்துக் கூறி அவர்களைப் பண்ணுறுத்தி, மகதநாட்டின்மீது படையெடுக்கும் சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனன். அங்ஙனம் எதிர்பார்த்த அவன், பல ஒற்றர்களைப் பாடலிபுத்திரத்திற்கனுப்பி ஆங்கு நிகழும் எல்லாச் செய்தியையும் அவர்களால் அறிந்து வந்ததோடு, அவர்களைக் கொண்டு சந்திரகுப்தனைக் கொல்வதற்குத் தான் ஏற்பாடு செய்திருந்த சிற்பி, வைத்தியன், கம்மாளன், ஜீவசித்தி, சகடதாஸன் முதலியவர்களையும் தான் கூறியவாறு இயற்றத் தூண்டியும் வந்தனன்.

---

## அத்தியாயம் 9

### சந்திரகுப்தன் அரண்மனைப் பிரவேசம்

இராக்ஷஸன் செய்த சூழ்ச்சிகளுக்கெல்லாம் தப்பிப் பிழைத்த சந்திரகுப்தனைச் சாணக்கியன் அரண்மனைப் பிரவேசம் செய்துவைக்க ஒரு நன்னாள் பார்த்து, அந்நாளில் அந்நகரிலுள்ள சிற்பிகளை அழைத்து அவர்களை நோக்கி, "சிற்பத் தொழிலில் வல்ல சிற்பிகளே! நீங்கள் இந்நகரிலுள்ள பொதுவிடங்களையும் அரண்மனையின் அகவிடங்களையும் புறவிடங்களையும் நன்கு அலங்கரியுங்கள். அரசன் இன்றிரவு அரண்மனைப் பிரவேசஞ் செய்யவேண்

வித்துச் சந்திரகுப்தன் அரண்மனைப் பிரவேசஞ் செய்கின்றான் எனக் குறிப்பித்தனன். அதைக் கேட்ட ஆங்குள்ளோரெல்லோரும் சந்திரகுப்தனுக்கு ஜயமுண்டாகுகவென ஜயகோஷம் புரிந்தனர்.

அச்சமயத்தில், யானை வாயிலுள் நுழைந்ததும், சந்திரகுப்தனைக் கொல்வதற்கென்று காத்துக்கொண்டிருந்த பர்ப்பரகன் தான் உறையுள் மறைத்துவைத்திருந்த கத்தியை வெளியே யெடுத்தனன். அவன் அக்கத்தியை உறையுள்ளிருந் தெடுத்தபோதுண்டாய சத்தத்தினால் யானை வேகமாய் நடக்க வாரம்பித்தது. அதுகாலை, தாருவர்மனென்னுஞ் சிற்பி, சந்திரகுப்தனைக் கொல்வதற்கென்று கோபுரவாயிலண்டை அமைத்திருந்த சூஸ்திரத்தை, யானையின் வேக நடையை யறியாது, தட்டிவிட்டனன். அச்சூஸ்திரம் வைரோதகன் மீது விழாது அவ்வாயிலில் வாளை உருவிக்கொண்டு சந்திரகுப்தனை வெட்ட வேண்டுமென்று நினைத்து நின்றுகொண்டிருந்த பர்ப்பரகன்மேல் விழுந்து அவனைக் கொன்றது. அதனைக் கண்ட தாருவர்மன், 'நான் வைத்த குறி தப்பி வேறொருவனைக் கொன்றது. இனி எனக்குச் சந்திரகுப்தனால் ஆபத்துவரும் என்பதில் சந்தேகமில்லை. நான், சந்திரகுப்தனைக் கொல்லுகிறேன் என்று இராக்ஷஸனிடம் ஒப்புக்கொண்டபடி, என் குறிக்குத் தப்பிய அவனை என் கை ஆயுதத்தால் கொல்லுகிறேன்' என்று தனக்குள் தீர்மானித்துத் தனது கையிலிருந்த ஆயுதத்தை வைரோதகன்மீது எறிந்து அவனைக் கொன்றனன். அதனைக் கண்ட ஜனங்கள் அத்தாருவர்மன் மீது கல்லையுங் கட்டியையும் வீசி எறிந்து அவனைக் கொன்றார்கள்.

இங்ஙனம், சந்திரகுப்தனுடைய முழு அரசுரிமைக்கு இடையூறா யிருந்த வைரோதகனையும், தாருவர்மன், பர்ப்பரகன் முதலிய கொடியவர்களையும் சாணக்கியன் தந்திரத்தி

று லொழித்தபின், சந்திரகுப்தனையும் மற்றும் பரிஜனங்களை யும் கூட்டிக்கொண்டு குறித்த நன்முகூர்த்தத்திற்குள் அரண் மனைப் பிரவேசஞ் செய்தனன்.

சந்திரகுப்தன் சாணக்கியனுடைய சகாயத்தினால் யாதோ ரிடையூறமின்றி அரண்மனைப் பிரவெசஞ்செய்து சுகமாகக் காலங்கழித்து வரும்போது ஒருநாள், ஒரு வைத்தியன் மருந் தொன்றைக் கொண்டுவந்து சந்திரகுப்தனிடம் கொடுத்து, அவனைப் பார்த்து, "மன்னர் மன்ன! நான் கொண்டு வந்த மஹா ஔஷதத்தைப் புசித்தால் மரணமடையுமளவும் நோயென்பதே வாராது. இது தேகத்திற்கு வன்மையும் மனதிற்கு உற்சாகத்தையும் தரவல்லது. இவ்வௌஷதம் மன்னர் மன்னன் புசிக்கக்கூடிய தகுதி வாய்ந்தது. மற்றை யோர் எளிதிற் புசிக்கக் கூடியதல்ல" என்று கூறி அம் மருந்தைச் சந்திரகுப்தன் உட்கொள்ளும்படி வற்புறுத்தினன்.

அப்பொழுது சந்திரகுப்தன் அருகிலிருந்த சாணக்கி யன், அவ்வைத்தியன் கூறியவற்றைக் கேட்டு, 'இவ்வைத்தி யன் இம்மருந்தைக் குறித்து இப்படி வற்புறுத்திக் கூறுவதற் குக் காரணமென்ன? இவன் கூறும் வார்த்தைகள் சந்தேகிக் கத் தக்கனவா யிருக்கின்றன. ஆயினும் அவன் கொடுத்த மருந்தைப் பரிசோதித் தறிவோம்' என்று தனக்குள் நிச்ச யித்து, அதைப் பரிசோதிக்கலானான். அங்ஙனம் பரிசோதிக் கும்போது அவ்வௌஷதம் விஷத்தின் சேர்க்கையாலான தெனத் தெரிந்தது. அதை யறிந்த சாணக்கியன் அம்மருந்தை ஒரு பாத்திரத்திலிட்டு, வைத்தியனிடங் கொண்டு வந்து கொடுத்து, "நீர் இம்மருந்திற் சிறிது உட்கொள்ளும். அர சன் அதன் பின் மிகுந்ததை உட்கொள்வான்" என்றனன். வைத்தியன் அதனைத் தடுப்பதற்கஞ்சி அவ்விஷமருந்தைப் புசித்துத் தலைகிறுகிறுக்கப் பூமியில் விழுந் திறந்தான். அதனைக் கண்டு சாணக்கியன், இது இராக்ஷஸனது சூழ்ச்சிபோலு

மென்று கருதி, அவன் செய்யும் சூழ்ச்சிகளுக்கெல்லாம் முன்னெச்சரிக்கையாக இருந்து வந்தான்.

அவன் அங்ஙனமிருக்கின்றபோது, சந்திரகுப்தனுக்கென்று ஏற்படுத்தியிருந்த படுக்கையறைக்குச் சந்திரகுப்தன் ஒரு நன் முகூர்த்தம் பார்த்துப் படுக்கச் சென்றனன். அப்பொழுது சாணக்கியன், 'அரசர்க்குப் பகைவர் அவன் புசிக்கும் அன்னத்திலும், படுக்கும் அறையிலும் தீங்கு விளைவிக்கத் தக்க காரியங்களைத் தங்களவரைக்கொண்டு செய்து வைப்பது வழக்கம். அதுபோல் சந்திரகுப்தனது அறையிலும் ஏதாவது தீங்கிழைக்கத் தக்கவை யிருக்கின்றனவா வென்பதைப் பரிசோதித்துப் பார்ப்போம்' என்று எண்ணங்கொண்டு, சந்திரகுப்தன் அவ்வறையிற் படுப்பதற்குமுன் அதனைச் சுற்றிப் பார்த்தனன். அங்ஙனம் பார்க்கின்றவளவில், அவ்வறையின் ஒரு பக்கத்தில் எறும்புகள் திண்பண்டங்களைக் கௌவிக்கொண்டு சாரையிட்டுச் சென்றன. அதனைக் கண்டு சாணக்கியன், 'மனித சஞ்சாரமும், உணவாதி பொருள்களுமில்லாத இவ்வறையில் எறும்புகள் இங்ஙனஞ் செல்வதற்குக் காரணமென்ன? இவ்வறையினுள் மனிதர்கள் எவரேனும் மறைந்திருக்கவேண்டும்' என்று அனுமானித்தறிந்து, அவ்வறையை நெருப்பிட்டுக் கொளுத்தச் செய்தனன். அதனால் அவ்வறைக்குள் சுரங்கமிட்டுச் சந்திரகுப்தன் வதைக்குக் காத்துக் கொண்டிருந்தவர் உயிர் துடித்திறந்தனர்.

இது நடந்த சின்னாட்களுக்குப் பின்பு, இராக்ஷஸன், சந்திரகுப்தன் சயன அறைக்கு அதிகாரியாயிருப்பவனுக்கு ஒற்றர்கள் மூலம் அதிக பொருள் கொடுத்து அனுப்பிச் சந்திரகுப்தனைக் கொல்லுமாறு திட்டஞ்செய்து வைத்தான். அவனும் அதற்கேற்ற சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டு, கிடைத்த மிகு பொருளினால் ஆடம்பரஞ் செய்துவந்தான்.

அதனைச் சாணக்கியன் கண்டு, "குறைந்த சம்பளத்தைப் பெறும் இவன் இவ்வளவு ஆடம்பரத்துடன் வாழ்வதற்குக் காரணமென்ன? இவ்வாடம்பரத்திற் கெல்லாம் இராக்ஷஸனுடைய பொருள் காரணமாயிருந்திருக்கவேண்டும். இராக்ஷஸன் மிக்க தனங்கொடுத்து இவனை வசியப்படுத்திச் சந்திரகுப்தனைக் கொல்ல வழிதேடி யிருக்கின்றான் என்பது இதனால் நன்கு விளங்குகிறது. எதற்கும் இவனை அழைத்துக்கேட்டறிவோம்" என்று தனக்குள் தீர்மானித்து, அவ்வதிகாரியை ஏவலாளரைக் கொண்டு அழைத்துவரச் செய்தனன். அவன் தன்முன் வந்ததும், அவனை நோக்கி, "அரசாங்கத்தில் குறைந்த சம்பளம் பெறும் நீ, ஆயிரம் பொன் பெற்று வாழும் அதிகாரியே என்னும்படி ஆடம்பரமாக வாழ்வதற்குக் காரணம் யாது? உண்மையை ஒளியாது சொல். பொய்யுரைத்தால் பெருந்தண்டனை யடைவாய்" என்று உறுத்துக் கேட்டனன். அதுகேட்டு அவன், பெரிதும் அச்சங்கொண்டு, முன்னுக்குப் பின் முரணான சில வார்த்தைகள் கூறித், தான் குற்றமுடையோன் என்பதனைக் காட்டிக் கொண்டனன். பின்பு சாணக்கியன் அத்துரோகியைக் கொலையாளிகள் வசம் ஒப்புவித்துத் தூக்கிடச் செய்தனன்.

அதன் பின்பு சாணக்கியன், இராக்ஷஸனது சூழ்ச்சியான காரியங்களைவும் தன்னிடம் பலியாதிருக்கும்படிச்செய்து சிலகாலம் சாவதானமாகக் காலங் கழித்துவந்தான். இராக்ஷஸனோ தான் புரிந்த சூழ்ச்சியொன்றும் பலியாது சபலமானதைக் குறித்து வருந்திக் காலங்கடத்தினன்.

---

## அத்தியாயம் 10

### சாணக்கியன் சாகஸம்

சாணக்கியன் இவ்வாறு இராக்ஷஸன் செய்த சூழ்ச்சிகளை யெல்லாம் யுக்தி புத்தி தந்திர பலத்தினால் வென்று சந்திரகுப்தனுக்கு யாதோரிடையூறுமின்றிக் காத்து வருகின்றபோது, ஒரு நாள் அவன், 'நாம் அன்னசத்திரத்தில் நந்தர்கள் முன்னிலையில் கூறிய சபதத்தை நிறைவேற்றிச் சந்திரகுப்தனுக்கு முடிசூட்டிவிட்டோம். இனிச் செய்ய வேண்டிய காரியம் யாதுமில்லை. பண்டுபோல் நாம் தவம் மேற்கொள்ளவேண்டிய காரியமே பாக்கியிலிருக்கிறது. ஆனால், நாம் சந்திரகுப்தனுக்கு முடி சூட்டியதைப் பொறாது இராக்ஷஸன் பல சூழ்ச்சிகள் புரிந்துவருகின்றான். நாம் காட்டிற்குச் சென்றுவிட்டால் சந்திரகுப்தனை அரைக்கணத்திற் போக்கி அரசபாக்கியத்தை அடவிக்குச் சென்றிருக்கும் சர்வார்த்தசித்திக்கு அளிப்பன். இராக்ஷஸன் தன் தலைவர்பால் பக்தியுடையவன்; தந்திரத்தில் கைதேர்ந்தவன்; அரச நீதியை அதிகம் கற்றவன்; உலகநூலை ஓதியுணர்ந்தவன; அலகிலாக் கலைகளை ஆழ்ந்தறிந்தவன்; நிலவுலகனைத்தும் நீடுதிரிந்தவன்; நிபுணமதி நிறைவை யுடையவன். இத்தகையனை நாம் வெளியில் விட்டுச் செல்லுதல் கூடாது. எவ்வகையாயினும் தந்திரஞ்செய்து அவனைச் சந்திரகுப்தனுக்கு அமைச்சனாக்க வேண்டும். அவனோ சர்வார்த்தசித்தி உயிரோடிருக்கிறவரையில் சந்திரகுப்தனுக்கு அமைச்சனாயிருக்க உடன்படான். இனி அச் சர்வார்த்தசித்தியை ஒழித்துவிட்டு, இராக்ஷஸனை மந்திரியாக நியமிப்பதற்குள்ள தந்திரங்களைச் செய்யவேண்டும்' என்று தனக்குள் எண்ணி, அவற்றை நிறைவேற்றுவதற்கான காரியங்களைப் பார்த்து வந்தான்.

அங்ஙனம் பார்த்து வருகின்றபோது, அவன் சில கொலைஞர்களை விட்டுக் காட்டிலிருக்கின்ற சர்வார்த்தசித்தி யைக் கொல்லுமாறு செய்து, இறந்த அம்மன்னனுக்குச் சந்திரகுப்தனைக் கொண்டு பிதிர்க்கடனை நிறைவேற்றி வைத் தனன். சந்திரகுப்தன் சர்வார்த்தசித்திக்கு இயற்றவேண் டிய கருமக் கடன்களை நிறைவேற்றியபோது, சாணக்கியன் தனக்கிசைந்த மூன்று விப்பிரர்களுக்கு முன் மாய மாதினு லிறந்த பர்வதேஸ்வரனது ஆபரணங்களைத் தானமாகக் கொடுக்கச் செய்தனன்.

அதன் பின்பு சாணக்கியன், ஆபரணங்களைத் தானமாகப் பெற்ற விப்பிரர்களைக் கொண்டு அவ்வாபரணங்களை இராக்ஷ ஸனிடம் விற்றுவர ஏவினன். அவர்களும் அவன் ஏவிய வாறே இராக்ஷஸனிடஞ் சென்று அவ்வாபரணங்களை விலைப் படுத்தி, அச்செய்தியைச் சாணக்கியனிடம் தெரிவித்துச் சென்றனர். விப்பிரர்களிடம் விலைக்கு வாங்கிய ஆபரணத் தை இராக்ஷஸன் பர்வதேஸ்வரனுடையதென் றறியாமல், அதனை வியாபாரத்திற்கு வந்த ஆபரணமென்றே கருதிப் பொக்கிஷத்திற் பத்திரப்படுத்தி வைத்தனன்.

இஃதிங்ஙனமாக, அமாத்திய இராக்ஷஸனுக்குப் பர்வதப் பிராந்தியங்களிலிருந்த பலஅரசர்கள் வசியப்பட்டுச் சந்திரகுப் தன்மீது படையெடுக்கத் துணைவருவதாகக் கூறியிருந்தனர். இவ்வாறு இராக்ஷஸனுக்குப் படைப்பெருக்கமும் துணை வலி மையும் மிகுதிப்பட்டு வருவதைச் சாணக்கியன் ஒற்றர்களா லறிந்து, அதனைக் கெடுக்க பாகுராயணனை அழைத்து அவ னுக்கு இரகசியமாகப் பல தந்திரங்களை எடுத்துக்கூறி, மலய கேதுவுக்கும் இராக்ஷஸனுக்கும் மித்திரபேதஞ் செய்யுமாறு ஆஞ்ஞாபித்து அனுப்பினன். அதன்பின் பத்ரபடன் முத லிய சில சேனாதிபதிகளை யழைத்து அவர்கள் தன்னை விரோ தித்துப் பர்வதேஸ்வரன் நாட்டில் வாழ்வதுபோல நடிக்கக்

கட்டளையிட்டு, அவர்களிடமும் சில இரகசிய மொழிகளைக் கூறியனுப்பினன்.

அவர்களை அங்ஙனம் அனுப்பிய பின்பு, சாணக்கியன், நிபுணகன் என்பவனை யழைத்து அவனைப் பார்த்து, "நிபுணக! நின் பெயருக் கேற்பவே நீ நிபுணமதியுடையை; தந்திரமுடையை. இத்தகையனுகிய நின்னை இவ்வூர் மாந்தரின் மனப்போக்கை யறிந்துவர ஏவுகின்றேன். நீ மாறுவேடம் பூண்டு இந்நகரத்தைச் சுற்றி, நகரமாந்தர் சந்திரகுப்தன் அரசைக் குறித்து யாது பேசுகின்றனர் என்பதையும், சந்திரகுப்தனுக்கு விரோதிகளின் பெருக்கம் அதிகமிருக்கின்றதா வென்பதையும், இன்னும் பிற விஷயங்களையும் அறிந்து எனக்குத் தெரிவிப்பாய்" என்று கூறி அவனை அனுப்பினன்.

அவன் பிச்சாண்டி வேடந் தரித்து, கையில் எமலோகத்தைச் சித்திரித்த ஒரு பெரிய படத்தை விரித்துப் பிடித்துக்கொண்டு, யமலோகத்தைக் குறித்த விஷயங்களையெல்லாம் விவரித்துக் கூறி நகரமுழுவதுஞ் சுற்றி, நகரச்செய்தி அனைத்துமறிந்து சாணக்கியனிடம் வந்து சேர்ந்தனன்.

வந்தவன் சாணக்கியனைப் பார்த்து, "சுவாமி! நான் இந்நகரைச் சுற்றிப் பார்த்து வந்ததில், நகரமாந்தர் அனைவரும் மௌரியனையும் அவன் புத்திரர்களையும் அநியாயமாய்க் கொன்ற நவநந்தர்கள் நாசமடைந்தது நியாயமென்றும், சந்திரகுப்தன் அரசனுக வந்தது சந்தோஷ காரியமென்றும் பேசிக்கொள்ளுகின்றனர். அரசனுக்கு மாற்றார் எவருமிலர். ஆனல், விஷகன்னிகையை யுண்டாக்கிய ஜீவசித்தி, சகடதாசன், சந்தனதாசன் ஆகிய இம்மூவரே இராக்ஷஸன் பக்கம் இசைந்தவர்களா யிருக்கின்றனர். இம்மூவர் தவிர வேறெவரும் அவன் பக்கமிலர். இம்மூவருள், சந்தனதாசன் என்பான் இல்லத்திலேயே இராக்ஷஸன் தன் மனைவி மக்களை

அடைக்கலமாக வைத்திருக்கின்றனன். இதனை நான் எங்ஙனம் கண்டேனெனில்,—பிச்சையின் நிமித்தம் சந்தனதாசன் வீட்டிற்குச்சென்று என் கையிலிருந்த படத்தைக் குறித்துச் சில கூறினேன். அதனைக் கேட்டுப் படத்தைக் காணும் பொருட்டு ஒரு சிறு பையன் வெளியே வந்தனன். அப்பையன் வெளிவந்ததும், அவனைத் தொடர்ந்து ஓரழகிய ஸ்திரீ தன் தேகமுழுவதையும் போர்த்துக்கொண்டு வெளிவந்து அச் சிறுவனைக் கைப்பிடித்து வீட்டிற்குள் அழைத்துச் சென்றனள். அப்பொழுது அவளணிந்திருந்த மோதிரம் விரல்நழுவிக் கீழேவிழுந்து என் பாதம்வரை உருண்டு வந்தது. அதனை அவளறியாமல் அகத்திற்குள் சென்றதும், நான் அம்மோதிரத்தை எடுத்து மறைத்துக்கொண்டு, வெளியிற் சிறிதுதூரம் வந்து அதனை நோக்கிப் பார்த்தேன். அதில் இராக்ஷஸன் பெயர் செதுக்கப்பட்டிருந்தது. அதனால் அம்மாதை இராக்ஷஸன் மனைவியென்றும், அச்சிறுவனை அவனது புத்திரனென்றும் அனுமானித்தறிந்தேன்" என்று கூறி, அம்மோதிரத்தை அவன் கையிற் கொடுத்தனன். சாணக்கியன் அதைப் பெற்று, 'இதுவும் இராக்ஷஸனை வசியப் படுத்துவதற்குத் தகுந்த கருவியாம்' எனக்கொண்டு அம்மோதிரத்தைப் பத்திரப்படுத்தினன்.

அதன் பின்பு சாணக்கியன், சகடதாஸனிடம் நட்புக் கொண்டிருக்கும் தன்னவனுள சித்தார்த்தகனென்பவனை இரகசியமாக அழைத்து, அவனிடம் ஒரு கடிதம் எழுதிக் கொடுத்து, 'இவ்வாசகம் போல் சகடதாஸன் கைப்பட ஒரு கடிதம் தந்திரமாக எழுதி வாங்கிவா' என அவனை ஏவினன். அவனும் தந்திரமாகச் சகடதாஸனிடம் சென்று சில வார்த்தைகள் கூறி, அப்போக்கிலேயே தன்கையிலிருந்த கடிதப்படி ஒரு நிருபம் அவன் கைப்பட வரைந்து வாங்கிக் கொண்டுவந்து, அதைச் சாணக்கியனிடம் சேர்த்தனன்.

சாணக்கியன், அக்கடிதத்தைப் பெற்று, அதன்மேல், முன் நிபுணனால் கிடைத்த இராக்ஷஸனுடைய முத்திரைமோதிரத்தைக்கொண்டு முத்திரையிட்டு, அதனைச் சித்தார்த்தகன் கையிற் கொடுத்து, அவனைப் பார்த்து, "மெய்ந் நண்ப! நான் இப்பொழுது உன்னை மிக முக்கியமான காரியத்திற்கு ஏவுகின்றேன். நீ உன் பெயருக் கேற்கவே இக்காரியத்தில் சித்தியடைந்து வரவேண்டும். இப்பொழுது நான் சகடதாசன் மீது குற்றஞ்சாட்டி அவனைத் தூக்கிலிடக் கொலையாளிகள் வசம் ஒப்புவித்து அனுப்புகின்றேன். அக்கொலையாளிகள் அவனைத் தூக்கிடும் இடத்திற்கு அழைத்துக்கொண்டு போனதும், நீ அவ்விடத்தில் திடீரெனத் தோன்றி, அக்கொலையாளிகளுக்குச் சில குறிப்புக்கள் காட்டி அவர்களை விரட்டிவிட்டு, அச்சகடதாசனை இராக்ஷஸ னிருக்கும் நகரத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் அவனிடம் ஒப்புவித்துப் பரிசுபெற்றுச் சிலகாலம் அவனிடத்திலேயே தங்கியிரு. அதன்பின்பு இராக்ஷஸனுக்குச் சேனைபலம் சேர்ந்ததும் நீ உன் கையில் வைத்திருக்கும் கடிதந்தை மலயகேதுவிடம் படித்துக்காட்டி, இராக்ஷஸனுக்கும் அம்மன்னனுக்கும் விரோதத்தை மூட்டிவிட்டுக் கடைசியில் என்னிடம் வந்து அடைவாய்" என மொழிந்து அவனை அனுப்பினன்.

அவனுக்குத் திட்டஞ்செய்து அனுப்பிய பின்பு, சாணக்கியன், ஏவலாளரைவிட்டு ஜீவசித்தியையும், சகடதாசனையும், சந்தனதாசனையும் அரசன் அழைத்துவர ஆஞ்ஞாபித்தா ரெனக் கூறி அழைத்துவரச்செய்து, ஜீவசித்தியைக் குறிப்பாகப் பார்த்து, "க்ஷபணக! நீ இராக்ஷஸன் ஏவலால் ஒரு மாயமாதை யுண்டாக்கி எனது மித்திரனை பர்வதேஸ்வானைக் கொன்றாய். இராக்ஷஸன் இப்பொழுது எங்களை விரோதித்து வெளிச்சென்று எங்களுக்குக் கேடு சூழ்கின்றான். அவனுக்கு மித்திரனை நீ இந்நாட்டி லிருந்தால்,

அவன் சூழும் கேட்டிற்கெல்லாம் இரகசியத்தில் உதவிபுரி ந்து வருவாய். ஆதலால் நீ இன்று முதல் இந்நாட்டெல்லை க்குள் வசிப்பதை விட்டு வேறுநாடு செல்வாய்" என உத்தர விட்டனன். ஜீவசித்தி, 'அங்ஙனமே செல்கின்றேன்' என்று கூறி வெளியேகி, இராக்ஷஸனை யடைந்து, தனக்குற்ற அரச உத்தரவைச் சொல்லி அவனிடம் முன்போலவே பொய்யன்பு காட்டி வசித்து வந்தனன்.

அவனுக்கு அவ்வாறு உத்தரவிட்டனுப்பிய பின், சாணக்கியன் தாஸனை யழைத்து, "சகடதாச! நீ எங்கள் விரோதியான இராக்ஷஸன் ஏவுகின்றபடி அரசனுக்குப் பல தீங்கிழைத்து வருகின்றாய்; பல தீங்கான காரியங்களுக்குத் துணைபுரிகின்றாய். இத்தகையனான உன்னைத் தூக்கிடும்படி அரசன் ஆஞ்ஞாபித்திருக்கின்றான். நீ கொலையாளிகள் பின் செல்வாய்" என்று கூறி அவனைக் கொலையாளிகள் வசம் ஒப்புவித்தனன்.

அதன் பின், சாணக்கியன் வைசியத்தலைவனாய் விளங் கும் சந்தனதாசனை யழைத்து அவனை நோக்கி, "சந்தனதாச! நமது சந்திரகுப்தன் அரசைக் குறித்துப் பிரஜைகள் யாது கூறுகின்றனர்" என்று வினவினன். அதற்குச் சந்தனதா சன், "சரத்கால சந்திரனின் ஒளி போலிருக்கின்றது என்று கூறுகின்றனர்" என்றனன். அதற்கு மேல் சாணக்கியன், "அரசன் விரோதிகள் மிக்க பலமுடையவர்களாயிருக்கின்றார் என்பதை நீ அறிவாயா?" என்று கேட்டனன். அதற்கு அவன் 'அத்தகையர் இப்பட்டணத்திலிருக்கின்றாரா?' என் றனன்.

சாணக்கியன் :—இராஜத்துரோகிகளுக்குத் தலைமை வகிப்ப வன் இப்பட்டணத்தில் நீயே யாவை. அஃதெங்ஙன மெனில், பர்வதேஸ்வரன் விஷக் கன்னிகையினால் மரித்த அன்றிரவு, இராக்ஷஸன் தன் மனைவியையும் மக்

களையும் உன் இல்லத்தில் மறைத்து வைத்ததினுலே யாகும். அஃதுண்மைதானே?"

சந்தனதாசன் :—சுவாமி! அமாத்திய இராக்ஷஸன் போகும் பொழுது தன் குடும்பத்தாரை என் இல்லத்தில் விட்டுச் சென்றது உண்மை தான். பின்பு அவர் திரும்பி வந்து அவர்களை யழைத்துக்கொண்டு போனுர்.

சாணக் :—அவர்கள் இப்பொழுது எங்கு இருக்கின்றனர் உனக்குத் தெரியுமா?

சந்தன :—எனக்குத் தெரியாது.

சாணக் :—சந்தனதாச! நான் சொல்வதைக் கேள். நீ இராக்ஷஸன் குடும்பத்தாரை அரசனிடங் கொண்டு வந்து ஒப்புவித்துவிட்டால், உன் புத்திர மித்திர களத்திராதியர் யாவரும் சுகமாக ஜீவித்திருப்பர்; இல்லையேல், எல்லோரையும் நாசஞ் செய்துவிடுவோம்.

சந்தன :—(மனத்திடங்கொண்டு) ஐயா! நான் சொல்வதை நம்பினுல் நம்புங்கள். நம்பாவிட்டால் உங்களிஷ்டப்படி செய்யுங்கள். நான் சொல்வது ஒன்றுதான்: நம்பினவர்களை எப்பொழுதும் நான் நட்டாற்றில் விடேன்.

சந்தனதாசன் தனது மித்திரன் நிமித்தம் இவ்வாறு கூறியதைக் கேட்டுச் சாணக்கியன், மனத்திற்குள் அவனை மெச்சி வெளிக்குக் கோபமுள்ளவன்போல் நடித்து, அவனை நொக்கி, "உனக்கு விநாசகாலம் சமீபத்தில்தா னிருக்கிறது; இப்பொழுதாவது நான் சொன்னபடி செய்வாயா?" என்று பயமுறுத்திக் கேட்டனன். அதற்கும் அவன் மனஞ்சாலியாதவனுய் முன் கூறியதையே மீண்டும் உரைத்தனன். அதன்பின் சாணக்கியன், 'இவனை இங்ஙனம் பயமுறுத்தி வினவுவதைவிட, இப்பொழுது இராஜாஞ்ஞையால் வருத்தப்படுபவர்களைக் காட்டி அச்சுறுத்திக் கேட்கவேண்டும்' என மனத்திற் கொண்டு, தனது சிஷ்யன் சாரங்கனென்பவனை விளித்து,

"வீதியில் என்ன சந்தடி? பார்த்துச் சொல்" என்றதும் அவன் அவ்வார்த்தையின் குறிப்பறிந்து தன்குருவை நோக்கி, "சுவாமி! ஜீவசித்தி என்பவன் விஷக்கன்னியைக் கொண்டு பர்வதேஸ்வரனை மாய்த்ததின் நிமித்தம் அரச ஆஞ்ஞையால் வெளியிலுள்ளவர்கள் அவனை நையப்புடைக்கின்றனர்" என்றனன். அதனைக் கேட்டுச் சாணக்கியன் சந்தனதாசனை நோக்கி, "தாச! பார்த்தனையா, இராஜத்துரோகிகள் படும் பாட்டினை. நீ என் வீணாக மடிந்து போகின்றனை?" என்றனன்.

அதற்குச் சந்தனதாசன், "நீர் என்னை எவ்வித துன்பத்திற் குள்ளாக்கினலுஞ் சரி, நான் ஒருபொழுதும் மித்திர துரோகத்தைமாத்திரஞ் செய்யேன்" என்றனன். அதனைக் கேட்டுச் சாணக்கியன், அதிக கோபமுள்ளவன் போல் அபிநயித்து, அவனைப் பார்த்து, "நீ பரம துஷ்டன்; அரச ஆஞ்ஞையை அலக்ஷியஞ் செய்கின்றாய். இதற்குத் தகுந்த பலனைக் கூடிய சிக்கிரத்தில் அனுபவிப்பை" என்று நிந்தித்துக் கூறும்பொழுது, மறுவலும் இராஜவீதியி லிருந்து ஒரு சத்தம் உண்டாயிற்று. அச் சத்தத்தைக் கேட்டுச் சாணக்கியன், "இஃதென்ன? அறிந்து வா" எனத் தனது சிஷ்யனை ஏவினன். அவன், அதனைக் கண்டு வந்து, "சுவாமி! சகடதாஸன் தாருவர்மனைக் கொண்டு வைரோதகனைக் கொன்றதின் காரணமாக அவனைத் தூக்கிலிட அரச ஆஞ்ஞை பிறந்திருக்கின்றது. அவனைக் கொலையாளிகள் இவ்வீதி வழியே அழைத்துச் செல்கின்றனர்" என்று தெரிவித்தனன்.

அப்பொழுது சாணக்கியன், சந்தனதாசனை நோக்கி, "கேட்டனையா அரச ஆஞ்ஞையை? நீ என் வீணாய்ப் பிராணனைப் போக்கடித்துக் கொள்ளுகிறாய். இப்பொழுதாவது இராக்ஷஸன் குடும்பத்தாரை அரசனிடம் ஒப்புவித்துவிடு. நீ சுகமாய் வாழலாம்" என்று பயநயமொழிகள் கூறிக் கேட்டனன்.

அதற்குச் சந்தனதாசன், சிறிதும் அகத்தில் அச்சங் கொள்ளாதவனாய், அவனை நோக்கி, "ஐயா! நான் மித்திர துரோகஞ் செய்வதனாலுண்டாகும் பாவத்தைக் காட்டிலும் நீர் எனக்குச் செய்யும் பாதகமே மேலானது. ஆகையால் நீர் பயமுறுத்துவதற்கு நான் பயப்படேன். உமக்கு என்னை எவ்விதம் தண்டிக்கவேண்டுமென்று கருத்திருக்கின்றதோ அவ்விதம் செய்யும்" என்றான்.

அவன் அங்ஙனம் கூறியதும், சாணக்கியன், 'இவன் மன உறுதியுடையவன்; மித்திரபக்தி மிகுதியுங் கொண்டவன்; உத்தம நண்பர்களுள் உயர்வடைந்துள்ளோன். இவனை என்ன பயமுறுத்தினும் மனஞ்சலியான். இவன் இங்ஙன மிருப்பதும் இராக்ஷஸனை வசியப்படுத்துதற்குச் சாதகந்தான்' என மனதிற்கொண்டு, காவலாளரை யழைத்து, 'இவனை இவன் குடும்பத்துடன் சிறையி லடையுங்கள்; அரசன் உத்தரவிட்டதும் பிராண தண்டனையை நிறைவேற்றலாம்" என்று கூறி, அவனையும் அவன் குடும்பத்தாரையும் சிறையிலடைப்பித்து, அவனது பொருளனைத்தையும் அராங்க பொக்கிஷத்தில் சேர்ப்பித்தனன்.

சந்தனதாசன் அரச சமுகத்திற்கு வரும்பொழுதே தனது கிருகத்தில் வசித்துவந்த இராக்ஷஸன் குடும்பத்தாரைத் தக்க காவலுடன் வேறொரு இல்லத்தில் விட்டுவந்தானாதலால், சாணக்கியன் அக்குடும்பத்தாரைச் சிறைப்பிடித்து வைக்க முடியவில்லை.

இங்ஙனம் சந்தனதாசனை அவன் குடும்பத்தோடு சிறையிலடைத்தபின், சாணக்கியன் சந்திரகுப்தனைக் கண்டு, "இன்னும் சில தினங்களுக்குள் நமது காரியம் பலிதமடையும். இராக்ஷஸன் உனக்கு முக்கிய மந்திரியாயிருக்கும் காலமும் நெருங்கிவிட்டது. ஆனால் அது சித்தியடைய ஒருபாயமிருக்கிறது. நீ நான் கூறுகிறபடி நடந்து கொண்டால் அக்

காரியம் விரைவில் கைகூடும். நான் கூறும் உபாயம் உன் மனத்திற்குப் பிடியாததாயிருந்தாலும், இச்சமயம் நீ அதை மேற்கொண்டுதான் நடக்கவேண்டியிருக்கிறது. அஃதென்ன காரியமெனில், நீ சின்னாட்கள்வரையில் என்னை விரோதித்துக் கொண்டவன்போல் நடித்துச் சபையில் பலரறிய என் வார்த்தைகளை உதாசினஞ் செய்துவரவேண்டுவதே யாகும்" என்று கூறினன். அரசன் அவ்விதஞ் செய்வதற்குச் சம்மதமில்லாமல் சம்மதித்தனன். அங்ஙனம் சம்மதித்த சின்னாட்களுக்குப்பின், சந்திரகுப்தன், சாணக்கியனும் மற்றுமுள்ள நகரமாந்தரும் சபையிலமர்ந்திருக்கக் கொலுவீற்று அரசவிசாரணை புரிந்துவருகையில், சபையோரைப் பார்த்து, "இந்தச் சாணக்கியன் என்னை யனுசரியாது இந்நகரத்திலுள்ளோரைப் பிடிக்கிறதும் தண்டிக்கிறதுமான காரியங்களைப் புரிந்துவருகின்றான். இவன் தன்னினும் மிக்கார் இல்லையென்ற செருக்குடையவன். மஹா கெர்வி. இவன் பிராமணனாயிருத்தலால் இவனை மன்னித்தேன்" என்று கோபத்துடன் கூறினன். அப்பொழுது பாம்பாட்டி வேடந் தரித்து அந்நகரில் உலாவிக் கொண்டிருந்த விராதகுப்தன் என்னும் ஒற்றன், சந்திரகுப்தன் சாணக்கியனை அலக்ஷியஞ் செய்து தள்ளிவிட்டானென்ற இவ்விசேஷ செய்தியையும், இன்னும் அந்நகரில் நிகழ்ந்தன பிறவற்றையும், இராக்ஷஸனுக்கு அறிவிக்க அதிதுரிதமாக இராக்ஷஸனிருக்கும் நகரை நோக்கிச் சென்றனன்.

இஃதிங்ஙனமாக, சாணக்கியன் முன்பு சகடதாசனைத் தூக்கிடும்படி ஆஞ்ஞாபித்த வண்ணம் கொலையாளிகள் அவனைத் தூக்கிடும் இடத்திற்கு அழைத்துச் சென்றனர். அப்பொழுது சித்தார்த்தகன் அங்கு தோன்றி, அக்கொலையாளிகளுக்குக் குறிப்புக் காட்டி விரட்டிவிட்டு அவர்கள் கையினின்றும் சகடதாசனை விடுவித்து, இராக்ஷஸனிருக்கும் நகரத்திற்கு அவனை யழைத்துச் சென்றனன். இந்தச் சமாசாரத்

தைக் கொலைஞர்கள் சாணக்கியனுக்குத் தெரிவிக்க, சாணக்கியன் சித்தார்த்தகன் மீது மிகவும் கோபமுள்ளவன்போல் நடித்துவந்தான்.

இவ்வாறு சாணக்கியன் இராக்ஷஸனை வசியப்படுத்துவதற்குப் பல சூழ்ச்சிகளைப் புரிந்து அவற்றின் முடிவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

---

## அத்தியாயம் 11

## மித்திர பேதம்

முன்னம், இராக்ஷஸனுக்கும் மலயகேதுவுக்கும் ஏற்பட்ட நிலைபெற்ற சிநேகத்தைக் கலைக்கவும், இராக்ஷஸனுக்குச் சேரும் துணைப்பலத்தைத் தொலைக்கவும், சாணக்கியன் ஏவிய பாகுராயணன், பத்ரபடன், புருடதத்தன், இடிங்கிராதன், பலகுப்தன், இராஜசேனன், விஜயமர்மன், போகிதாக்ஷன் முதலிய சேனாதிபதிகள் பர்வதநாட்டிற்குச் சென்று மலையகேது மன்னனைக் கண்டனர். மலையகேது, முன்னர்த் தான் தனது தந்தையுடன் பாடலிபுத்திரம் சென்றிருந்தபோது தன்னை நேசித்துத் தனக்குச் சாணக்கியனால் தீங்கு நேரிடாவாறு முன்னெச்சரிக்கை செய்து தன் நகருக்கு அனுப்பியவனான பாகுராயணனை முன்னிட்டுக்கொண்டு வந்த பத்ரபடன் முதலிய சேனாதிபதிகளைக் கண்டு, ‘ வாருங்கள் ’ என்று அன்பு மொழி கூறி வரவேற்று, அவர்களை ஆசனங்களில் அமரச்செய்த பின்பு, அவர்களை நோக்கி, “அன்பர்களே! நீங்கள் இந்நெடுந்தூரம் என்னை நாடி வந்ததின் காரணம் யாதோ?” என வினவினன். அவர்களில் பாகுராயணன், “ அன்பார்ந்த மன்ன, நவநாயக ஆட்சியில் நன்மை பலவும் பெற்று வந்த நாங்கள், சாணக்கியன் என்பவனைத் துஷ்ட

மந்திரியாகப் பெற்ற சந்திரகுப்தன் ஆட்சியில் தீமையையே யடையலானேம். இதற்குக் காரணம் நெடும் பகல் நவநந் தர்கள் ஆட்சியில் நாங்கள் சேவை புரிந்ததேயாகும். அங்ஙனம் புரிந்த நாங்கள் எங்ஙனமாயினும் அமாத்திய இராக்ஷஸனுக்குத் துணைபுரியவே எண்ணுவோம் என்பது அவர்களது ஐயம். இக்காரணத்தால் நாங்கள் அலட்சியஞ் செய்யும் அரசாங்கத்தை விட்டு எங்களை இலட்சியஞ் செய்யும் அரசாங்கத்தைத் தேடி வந்தோம். தங்களுக்கு எங்களை இவ்வாட்சியின் கீழ் நிறுத்த எண்ணமிருப்பின் தெரிவியுங்கள். இல்லையேல் நாங்கள் வேறு வேந்தர்களை நாடிச் செல்கின்றேம்'' என்று மொழிந்தனன்.

மலயகேது அவன் மொழி கேட்டு, தன் மனத்திற்குள், 'இச் சேனதிபதிகள் நவநந்தர்கள் ஆட்சியில் அந்நாட்டிற்கு நாயகமாக விளங்கியவர்கள் ; பல போர்முனைகளைக் கண்டவர்கள் ; இத்தகையர் நமது ஆட்சியின்கி ழிருந்தால் நமக்கு நலன் பல உண்டாகு மென்பதில் ஐயமில்லை. நாளைச் சந்திரகுப்தன்மீது தொடுக்கவிருக்கும் போரில், நாட்டின் தன்மையறிந்த இவர்கள் உதவி நன்மை தரத்தக்கது ' என்றெண்ணி, அவர்களைப் பார்த்து, "அன்பர்களே! உங்களுக்கு என் அரசாட்சியி லிருக்க விருப்பமுண்டாயின் நீங்கள் விரும்பியவா றிருக்கலாம்'' என்று கூறி, அவர்களுக்குத் தகுந்த உத்தியோகங்களைக் கொடுத்தனன். அவர்களும் அவன் குறிப்பிட்ட உத்தியோகங்களிலிருந்து, இராக்ஷஸனது முயற்சி, துணைபலம், செல்வாக்கு முதலியவைகளைக் கவனித்து, இராக்ஷஸனுக்கும் மலயகேதுவுக்கும் மித்திரபேதத்தை யுண்டாக்கத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தனர்.

அப்பொழுது பாகுராயணன், தான் வந்த காரியத்தில் கருத்தைச் செலுத்தி, இராக்ஷஸன் மனேநிலையைக் கண்டறிய ஒருநாள் அவனிடஞ் சென்றனன். அதுபொழுது

இராக்ஷஸன், "நமது தலைவர்கள் யாவரும் நாசமடைந்தனர்; நாம் மௌரிய புத்திரன் நாசத்தின் நிமித்தம் செய்த சூழ்ச்சிகள் யாவும் பயனற்றுப் போயின" என்று தனக்குள் சிந்தித்துக்கொண் டிருந்தனன். அங்ஙனஞ் சிந்தித்துக்கொண்டிருக்கும் இராக்ஷஸன், தன்முன் பாகுராயணன் நிற்பதைக் கண்டு, "பாகுராயண! எங்கு வந்தாய்? அரசன் கட்டளை ஏதாவதுண்டா?" என அவனைக் கேட்டனன். அவன் அதற்கு, "மந்திரித் தலைவ! நீர் நெடும்பகலாய்ப் பூஷணாதிகளணியா திருப்பது அநுசிதம் என்றும், இப்பொழுது பூஷணங்களை அணிந்துகொள்ளும்படியும் ஆஞ்ஞாபித்தார்" என்றனன். அதற்கு இராக்ஷஸன், "மௌரிய புத்திரனைச் சிம்மாசனத்தினின்றும் நீக்கி, அவ்வாசனத்தில் மலயகேதுவை ஏற்றுகிற வரையில் நான் எனது ஆபரணங்களை அணியேன்; அதுவரையில் இவ்வாறே இருப்பேன்" என்றனன். அப்பொழுது பாகுராயணன், "உமது புத்திபலத்திற்குமுன் எது என்ன செய்யும்? காலம் வந்தால் எல்லாம் கைகூடுகிறது. இப்பொழுது நீர் உமது பெரிய விருதுகளுடன் கூடிய பூஷணங்களை அணிந்துகொள்ளும்" என்று கூறியதும், அவன் அதைத் தட்டாமல் தனது ஆபரணங்களை எடுத்து அணிந்துகொண்டனன். அதன்பின் பாகுராயணன் வெளிச் சென்றனன்.

அவன் சென்றபின், ஜீர்ணவிஷூண்டன் என்னும் பெயர் பூண்ட பாம்பாட்டி யொருவன், இராக்ஷஸன் மனையின் தலைவாயி லண்டை வந்து, வாயில் காப்பாளரைக் கண்டு, "பாம்பாட்டி யொருவன் வந்திருக்கின்றான்; அவன் பிரபு தரிசனத்திற்கு உள்ளே வரலாமா?" என்று இராக்ஷஸனைக் கேட்டுத் தெரிவிக்கும்படி கூறினன். அக்காவலர் இதனை இராக்ஷஸனுக்குத் தெரிவிக்க, இராக்ஷஸன், "சர்ப்பதரிசனம் சிரேஷ்டமாகாது: அவனுக்கு ஏதாவது கொடுத்து அவனைப் போ

கும்படிச் செய்யுங்கள்" என்றனன். காவலர் வெளிவந்து, 'உனக்கேதாவது வேண்டுமாயின் கேள்; அதனைத் தருகின்றோம்; பிரபு உன்னைப் பார்க்க முடியாது என்கின்றார்" என்று அப்பாம்புப்பிடாரனுக்குத் தெரிவித்தனர். அவன், "நான் பாம்பாட்டி ஜீவிக்கிறது மாத்திர மல்ல; பிராகிருத மொழிக் கவிகளையுஞ் செய்யும் பாண்டித்திய முடையேன்" என்று அக்காவலர்க்குக் கூறி, ஒரு சீட்டில் கவியொன்றை எழுதி அச்சிட்டை அமாத்திய இராக்ஷஸனிடம் சேர்ப்பிக்கச் சொன்னான். அவர்களும் அங்ஙனமே சேர்க்க, இராக்ஷஸன் அக்கவியை வாசித்துப் பொருளறிந்து, வந்திருப்பவன் தன்னவனென்று தெளிந்து, அவனை உள்ளே அழைத்துவரச் செய்தனன்.

அவன் உள்ளே வந்ததும், இராக்ஷஸன் அவனைப் பார்த்து, "என்னன்ப! என் நிமித்தமல்லவோ நீ இந் நெடுந்தூரம் வந்தனை. எதற்காக இக்கோர ரூபத்தினைத் தரித்துக் கொண்டாய்?" என்று துக்கத்துடன் கேட்டனன். அதற்கு அவன், "நண்பன் பொருட்டு நெடுந்தூரத்தினையும் பார்ப்பதுண்டோ? இவ்வேடமும் உனது காரியத்தின் பொருட்டேயாகும்" என்று பதிலிறுத்த பின், பாடலிபுத்திரத்தில், வைரோதகன் புரப்பிரவேசம் செய்தது முதல், சகடதாஸன் மரணதண்டனை யடைந்து, கொலையாளிகள் அவனைக் கொலைக்களத்திற்கு அழைத்துச் சென்றது வரையிலுள்ள எல்லாச் சமாசாரங்களையுங் கூறி, அவனை நோக்கி, "மதிசிரேஷ்ட! சாணக்கியனது புத்தி பலத்தினால் ரக்ஷிக்கப்படுகின்ற சந்திரகுப்தனை நாசஞ்செய்ய நீ செய்த முயற்சிகளெல்லாம் வியர்த்தமாயின" என்று உரைத்தனன்.

அதைக் கேட்டு இராக்ஷஸன் மிகவும் துக்கித்து, "நான் மௌரிய புத்திரனை வதைக்க விஷகன்னிகையை ஏவினால், அது அப்புத்திரன் ஆட்சியில் அர்த்தபாகத்தை யடைய உரி

மைபெற்றவனும் எனது அந்தரங்க நண்பனுமாயிருந்த பர்வதேஸ்வரனைக் கொன்றது. சூஸ்திரப் பிரயோகத்தினல் சந்திரகுப்தனை மாய்க்கத் தாருவர்மனைப் பிரேரேபித்தால், அவன் வைரோதகனைக் கொன்று முடிவில் தானும் மாண்டான். அவன் அங்ஙனமானாலும், விஷவைத்தியனாவது காரியசித்தி பெற்று வருவானென்று பார்த்தால், அவனும் தான் கொண்டுசென்ற அவ்விஷத்தையே புசித்து இறந்தான். இவ்வாறு செய்த என் பிரயத்தனமெல்லாம் சந்திரகுப்தனுக்கே அநுகூலமாக முடிந்து எனக்கு நிஷ்பலனைத் தந்தன" என்று கூறி வருந்தினன்.

அவனுக்கு விராதகுப்தன், "ஐயா, நாம் எத்துணை உபாயங்கள் செய்தாலும் அவற்றிற் கெல்லாம் தெய்வசகாயம் வேண்டாமா? வீணே வருந்துதலில் என்ன பயன்? கவலையை யொழித்து இனியாகுங் காரியங்களைப் பார்" என்று தேறுதல் கூறி, மறுபடியும் அவனைப் பார்த்து, "சந்தனதாசனது கிருகத்தில் உனது குடும்பத்தாரை விட்டுவந்தா யல்லவா? அதனை அரசனறிந்தால், அவனையும் உன் குடும்பத்தாரையும் சிறைவாசஞ் செய்யவல்லலோ ஆஞ்ஞாபிப்பான்" என்றனன். அதற்கு அவன், "சந்தனதாசனிடம் என் குடும்ப மிருக்கிறதை எவரும் அறியார். என் குடும்பத்தை அவன் ஆதினத்தில் விட்டுவந்தபின்தான் என் மனம் நிம்மதியடைந்திருக்கிறது" என்றனன்.

இங்ஙனம் அவர்கள் உரையாடிக் கொண்டிருக்கும்பொழுது, வாயில் காவலன் வந்து, "பிரபோ! சகடதாசன் சித்தார்த்தகன் என்போர் இருவர் வந்து வாயிலில் நின்று, உள்ளே வரத் தங்கள்அனுமதி கேட்கின்றனர்" என்றனன். இராக்ஷஸன் அவ்வுரை கேட்டு, "என்ன இது! இதற்குமுன் சகடதாசனைக் குறித்து என்ன கேள்விப்பட்டோம்; இப்பொழுது என்ன கேள்விப்படுகிறோம்! இது கனவோ? அல்லது

நினைவோ ? மனமருட்சிதான் இவ்வாறு செய்கின்றதோ ?" என்று கூறிச் சிந்தை தடுமாறும்பொழுது, வாயில்காவலன், "ஐயா உண்மையாகவே இருவர் வந்து காத்துக் கொண்டிருக்கின்றனர். தாங்கள் இதைக் கனவென்று கருதாது நினைவென்று கருதுங்கள்" என்றனன்.

அவன் அங்ஙனங் கூறவும் இராக்ஷஸன் மனந்தெளிந்து, "அவர்களை உடனே அழைத்துவா" வென்று கட்டளையிட்டு, அவர்கள் வரவுக்கு எதிர்நோக்கினன். அப்பொழுது சகடதாசன் இயமன் கையிலிருந்து தப்பிய உயிரென்னும்படி சோர்ந்த முகத்துடன் சித்தார்த்தகனோடு வந்தான். அவன் வரவைக் கண்டதும் இராக்ஷஸன் எதிர்சென்றோடி அவன் மார்பை இறுகப்பிடித்துக் கட்டிக்கொண்டு, "அன்பார்ந்த நண்ப! சகடதாசா ! எனக்கு உயிர் தந்தனையா ! என்னிரு கண்களுக்குக் களிப்பை யளித்தனையா ! " என்று ஆர்வமொழி கூறினன். அதற்குச் சகடதாசன், "அன்ப! உனக்கு நான் உயிரளிக்க வில்லை ; நேத்திரானந்தந் தரவில்லை. இதோ இருக்கின்றாரே சித்தார்த்தக னென்னும் சிரேஷ்டமித்திரன்; இவரே அவையெல்லாமளித்தவர். இவர், கொலையாளிகளின் கையிற் சிக்கிக் கட்டுண்டிருந்த என் முன் உயிரளிக்குந்தெய்வமாகவும், கொலைஞர்முன் உயிரைக் கவர்ந்து செல்லும் இயமனாகவும் தோன்றி, என்னைப் பிணித்திருந்த கட்டுகளைச் சட்டெனத் துணித்துப் பாம்பின்வாய்த் தேரையெனும்படி அக்கொலைஞர்கையில் அகப்பட்டிருந்த என் கையைப்பற்றி அவர்களை விரட்டிவிட்டு இங்கே அழைத்து வந்தார்" என்றனன்.

அதைக் கேட்டு இராக்ஷஸன் சித்தார்த்தகனை நோக்கி, "அன்ப! எனது சுகிர்தபிராணமாகிய மித்திர ரத்தினத்தைக் காத்து எனக்குப் பிராணதானம் அளித்தனை. உன் அரிய உதவிக்கு இவ்வுலகத்தையும் இந்திரனுலகத்தையும் கொடுத்தாலும் ஈடாகா" என்று புகழ்ந்து பேசி,

தானணிந்திருந்த ஆபரணங்களைக் கழற்றி அவனுக்குப் பரிசளித்தனன். அவன் அவ்வாபரணங்களைப் பெற்றுத் தன் கையிலிருந்த கடிதத்தை ஆபரணங்களினிடையே செருகி, அதன்மீது தனக்கு முன் கிடைத்த முத்திரை மோதிரத்தினுல் முத்திரையிட்டு, அம்முடிப்பைச் சகடதாசனிடம் கொடுத்து, "நான் கேட்கும்போது இதனைக் கொடுப்பாய். அதுவரையில் உன்னிடமே இது இருக்கட்டும்" என்று கூறிக் கொடுத்தனன். இராக்ஷஸனும், "சகடதாசா! அப்படியே செய்'' என்றனன். அவனும் அதைப் பெற்றுப் பொக்கிஷத்தில் வைக்கும்பொழுது, அதன் மேலிருக்கும் முத்திரையைக் கவனித்து, "இதென்ன விந்தை! அமாத்திய இராக்ஷஸா! இதன் மேலிட்டிருக்கும் முத்திரைகள் உன் பெயர் பொறித்தனவாக இருக்கின்றனவே. உன் முத்திரை மோதிரம் இவனிடத்தில் எப்படி வந்தது?" என்று இராக்ஷஸனை வினவினன். இராக்ஷஸன் சித்தார்த்தகனைப் பார்த்து, "உன் கைக்கு இது எப்படி வந்தது?" என்று கேட்டனன். அவன், "பாடலிபுத்திரத்திலுள்ள சந்தனதாசனது இல்லத்தின் முன் இருக்கக் கண்டெடுத்தேன்" என்றான். அப்பொழுது இராக்ஷஸன், "அது சரியே! நான் பட்டணத்திலிருந்து வெளியே புறப்படும்பொழுது என் மனைவியின் காலப்போக்கிற்காக இம்முத்திரை மோதிரத்தைக் கொடுத்து வந்தேன். அவள் ஒரு சமயம் இதனை அவ்வில்லத்தில் இழந்திருக்கலாம்'' என்று கூறி, அம்முத்திரை மோதிரத்திற்கு விசேஷ பொருள் கொடுத்து அவனிடமிருந்து பெற்று, அவ்வாழியைச் சகடதாசனிடம் கொடுத்து, நீ இதைக்கொண்டே என் காரியங்களைப் பார்த்துவா'' வெனக் கூறினன். அவனும் 'அங்ஙனமே' எனப் பெற்றுக்கொண்டனன். ஆழியின் நிமித்தம் பெற்ற பொருளையும் சித்தார்த்தகன் சகடதாசனிடம் கொடுத்து முத்திரை மோதிரத்தினுல் முத்திரித்து வைக்

கச் செய்தனன். அதன் பின் சித்தார்த்தகன் இராக்ஷஸனைப் பார்த்து, "ஐயா! நான் சகடதாசனை மரணதண்டனையினின் றும் மீட்டதற்காகச் சாணக்கியன் என்மீது கோபங்கொண் டிருப்பன். அங்குச் செல்வேனானல் என்னை மரணதண்ட னைக்கு உள்ளாக்குவேன். ஆதலால் நான் தங்களிடமிருந்தே சேவை செய்கின்றேன்" என்றான். இராக்ஷஸன் அதற்குச் சம்மதித்து அவனைத் தன்னிடத்திலேயே நிறுத்திக் கொண் டனன்.

அதன் பின்பு, இராக்ஷஸன், ஜீர்ணவிஷூண்டன் எனப் புனைபெயர் பூண்ட விராதகுப்தனை யழைத்து, "இன்னும் ஏதாவது நகரத்தில் விசேஷமுண்டோ?" என வினவினன். அதற்கு விராதகுப்தன், "சாணக்கியன், தான் சந்திரகுப்த னுக்கு அரசு அளித்ததாகக் கர்வித்து, அரச ஆஞ்ஞைக்கெல் லாம் பங்கம் விளைத்து வருகின்றான். அதனால் சந்திரகுப்தன் அவன்மீது அதிக கோபங்கொண்டிருக்கின்றான்" என்றான். இராக்ஷஸன் அச்செய்தி கேட்டு அகங்களித்து, "விராத குப்தா! நீ இவ்வேடத்துடனேயே பாடலிபுத்திரம் சென்று, ஆண்டுள்ள எனது நண்பன் வைதாளிகனைக் கண்டு, 'இப் பொழுது சந்திரகுப்தன் ஆஞ்ஞைகளைச் சாணக்கியன் பங்கப் படுத்தி வருவதையும், அவ்விருவருக்குள்ளுமுண்டாகும் விரோதத்தினையும் அவ்வப்பொழுது தெரிந்து இரகசியமாகக் கரபகனிடம் சீட்டெழுதி அனுப்புமாறு நான் கூறியதாக அவனிடம் கூறுவாய்' என்றனன். அவனும் அங்ஙனமே செய்யச் சம்மதித்துச் சென்றனன்.

அவன் சென்றதும், இராக்ஷஸன், சாணக்கிய சந்திரகுப்த விரோதத்தினை உண்மையென்று நம்பி, சந்திரகுப்தன்மீது படையெடுப்பதற்கான முயற்சிகளை மிக்க உத்ஸாகத்துடன் செய்து வந்தனன். அவனது சாரர்களும், அவ்வப்போது, சாணக்கியனுக்கும் சந்திரகுப்தனுக்கும் உண்டாகும் விரோத

வாக்கு வாதங்களையும், அவர்கள் ஒற்றுமையின்மையின் பல ஹீனத்தையும் அறிந்து அவனுக்குத் தெரிவித்து வந்தார்கள். சாணக்கியனும், தான் சந்திரகுப்தனிடம் விரோதமாக நடந்து கொள்வதை இராக்ஷஸன் உண்மையென்று நம்பி உக்ஸாகத்துடன் யுத்த சந்நாகம் செய்து வருவதைத் தனது ஒற்றர்களாலறிந்து, நாளுக்கு நாள் தனக்கும் சந்திரகுப்தனுக்கும் விரோதம் அதிகப்படுவது போல வெளிக்குத் தோன்றும்படி முன்னினும் அதிகமாக நடித்து வந்தான்.

ஒருநாள் சந்திரகுப்தன் ஜனரஞ்சித நிமித்தம் சந்திரிகோத்ஸவம் என்னும் திருவிழா நடத்த நகரமாந்தருக்கறிவித்து நகரை யலங்கரிக்கும்படி ஏவலாளருக்கு ஆஞ்ஞையிட்டனன். அவ்வாஞ்ஞையைச் சாணக்கியன் நிறைவேறா வண்ணம் தடுத்துவிட்டனன். அதனை யறிந்த அரசன், சாணக்கியனை யழைத்து, "நீ எதற்காக என் ஆஞ்ஞையை மறுத்து மஹோத்ஸவம் நடவாவண்ணம் செய்தனை?" என்று கேட்க, அதற்கு அவன், "நீ எனது சிஷ்யனாயிருக்கும் பொழுது நான் அதனை ஆக்ஷேபித்தற் கூடாதோ" என்று பதிலிறுத்தனன். சந்திரகுப்தன், "உன் சொற்படி அரசாங்கம் நடப்பதென்றால் நான் அரசனாயிருப்பதில் யாது பிரயோசனம்?" என்று மிக்க கோபத்துடன் கூறினன்.

இவ்வாறு ஒருவருக்கொருவர் வாதித்துக்கொண்டிருக்கும்பொழுது, வைதாளிகனென்போன் வந்து அரசனைக் கண்டு பல கவிகள் கூறி அவன் அகத்தைக் களிப்பித்தனன். அரசன் அக்கவிக்கு மகிழ்ந்து அவனுக்கு வேண்டிய பொன் கொடுத்து அனுப்புமாறு பொக்கிஷ அதிகாரிக்குக் கூறினன். அதனையும் சாணக்கியன் தடுத்து அக்கவியாளன் பொன்பெறா வண்ணம் செய்தனன். அப்பொழுது சந்திரகுப்தன் அதிகமும் கோபித்து, "எல்லாக் காரியங்களும் உன் ஆஞ்ஞைப்படித்தான் நடக்கவேண்டுமோ?' என்று கேட்டனன். அதற்குச்

சாணக்கியன், "மந்திரிகளில்லாமல் அரசாங்க காரியங்களை அரசர்கள் நடத்தற்கூடுமோ" என்றனன். மன்னன், "என்னால் கூடும்" எனப் பதில் கூறினன். சாணக்கியன், "அங்ஙனமானால் சந்தோஷமே. நான் இனி எனது சொந்த காரியத்தைப் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று கூறி, அமைச்சன் தொழிலுக்குள்ள விருது முதலியவைகளைக் கீழே வைத்தனன். அப்பொழுது சந்திரகுப்தன், "நல்லது. நீ சந்திரிகோத்ஸவமென்னும் கௌமுதி மஹோத்ஸவத்தை நடவாமற் செய்ததற்குக் காரணம் என்ன?" என்று அவனை வினவினன்.

சாணக்கியன் :—மன்ன! நீ அம்மஹோத்ஸவத்தைச் செய்வதற்குக் காரணம் என்ன? சொல்.

சந்திரகுப்தன் :—நான் சத்துருக்களை ஜெயித்து சிம்மாசனமேறியதற்கும், குடிகள் க்ஷேமத்தையடைவதற்கும் இம்மஹோத்ஸவத்தைக் கொண்டாடும்படிச் செய்தேன். இது தான் காரணம். நீ உன் காரணத்தைச் சொல்.

சாணக் :—அரசே! நம்மிடத்திலிருந்த அஸ்வாத்யக்ஷன் கஜாத்யக்ஷனென்னும் இருவர் நம்மைத் துரோகஞ் செய்து மலயகேது மன்னனிடம் போய் உத்தியோகத்திலமர்ந்திருக்கின்றனர். இவர்களன்றி நமது முக்கிய சேனாதிபதியான பாகுராயணன், பர்வதேஸ்வரனை நாம் கொன்றதாகப் பொய்வசனங் கூறி அவனை நேசித்து அவன் அரசாங்கத்தில் அதிகாரியாயிருந்து வருகிறான். மலயகேதுவும் இராக்ஷஸன் தூண்டுதலால் நம்மீது படையெடுக்க இருக்கின்றான். ஆதலால், இது யுத்த முயற்சிக்குள்ள சமயமேயொழிய, உத்ஸவங்கொண்டாடுவதற்கான சமயமல்லவென்று கருதி, அவ்வுத்ஸவத்தை நடவாதவாறு செய்துவிட்டேன். இதுவே அதற்கு முக்கிய காரணமாகும்.

சந்திர :—அங்ஙனமானால், நமக்குப் பகைவனென்று கூறும்

மலயகேதுவை நிர்ப்பந்திக்காமல் நீர் உபேக்ஷை செய்து விட்டதற்குக் காரணமென்ன? இது, மாட்டின் தும்பை விட்டு வாலைப் பிடிப்பதுபோலல்லவோ இருக்கிறது.

சாணக் :—சந்திரகுப்த! அங்ஙனம் அவனை விட்டதற்கும் காரணமிருக்கிறது. நமக்கு இராஜ்யம் கிடைத்ததற்கு முக்கிய உதவியாயிருந்தவன் அவன் பிதா பர்வதேஸ்வரனாகும். அவ்வாறிருக்க, அவனை நிர்ப்பந்தித்தால் நாம் நன்றியற்றவர்களென்று அவன் கருதுவான். அதைக் கருதியே அவனை விட்டுவிட்டேன். அவனும் இவ்விராஜ்யத்தில் தனக்குக் கிடைக்கவேண்டிய அர்த்த பாகத்தைக் கேட்காமல் போய்விட்டதே நமக்கொரு இலாபமல்லவா? எவ்வாறோ உனக்கு இராஜ்யம் சித்திக்கும்படி செய்தேன். நீ அதை வைத்துக் காப்பாற்றிக் கொள்.

சந்திர :—எனக்கு இராஜ்ஜியம் நீயா கொடுத்தாய்? மனிதனால் கொடுப்பதும் வாங்குவதும் கூடுமோ? தெய்வீகமாக அல்லவோ எனக்கு இவ்விராஜ்ஜியம் வந்தது.

சாணக் :—(கோபங்கொண்டு) ஏ துராத்மா! உனக்கு இராஜ்ஜியம் தெய்வீகமாகவா வந்தது? செய்ந்நன்றியைக் கொன்ற நீ அவ்வாறு தான் கூறுவாய். இங்ஙனம் நீ கூறுவது இராக்ஷஸன் சூழ்ச்சியோ! இராக்ஷஸா! நீ என்ன செய்தாயடா! உனக்கே தகும் இப்பெயர்.

இவ்வாறு கூறிக்கொண்டே சாணக்கியன் வெளியே சென்றான். அதுமுதல் சந்திரகுப்தன், சாணக்கியனை மந்திரி பதவியினின்றும் விலக்கிவிட்டு, தானே அரசாங்க காரியத்தைப் பார்த்து வந்தான். குடிகளுக்கும் இச்செய்தியை அறிவித்துவைத்தான்.

இங்ஙனம் சந்திரகுப்தனுக்கும் சாணக்கியனுக்கும் நேர்ந்த விரோதத்தினை இராக்ஷஸனுடைய சாரர்கள் உண்மையெ

ன்றுகொண்டு, இச் செய்தியை அவனுக்குத் தெரிவித்தனர். அவனும் சத்ருவைக் கொல்வதற்கு இதுதான் தக்க சமய மென்று கருதி, சந்திரகுப்தன்மீது தண்டெடுக்கச் சேனைக ளைத் தயார் செய்துவந்தான்.

அப்பொழுது பாடலிபுத்திரத்தினின்றும் பர்வதேஸ்வர நாட்டிற்குச் சென்று இராஜத்வேஷமான காரியங்களைச் செ ய்துகொண்டிருந்த பத்ரபடன் முதலியோர், மலயகேது கொ லுமுகத்திற்குச் சென்று அவனைக் கண்டு, "மன்னர் மன்ன! இப்பொழுது படையெடுப்புக்கான காரியங்கள் நடந்து வருகி ன்றன. நாங்கள் இப்படையெடுப்பில் இராக்ஷஸனுக்குக் கீழ் ப்படிந்து அவன் ஆஞ்ஞைப்படி நடந்துகொள்ளச் சம்மதி யோம். நாங்கள் அவனை விரும்பித் தங்களிடம் வரவில்லை. துர்மந்திரியின் வசப்பட்ட சந்திரகுப்தன் மீது வெறுப்புற்றுத் தங்களை வந்தடைந்தோம்" என்று கூறினர். அதைக் கேட்டு மலயகேது பாகுராயணனை நோக்கி, "இவர்கள் ஏன் இப்படிச் சொல்லுகிறார்கள்" என்று கேட்டான். அதற்குப் பாகுராயணன், "இராக்ஷஸனுக்குச் சாணக்கிய னிடம் பகையே யொழிய சந்திரகுப்தனிடம் பகையில்லை. ஒருசமயம் சந்திரகுப்தன் சாணக்கியனை வெறுத்துத் தள்ளி விட்டால், அப்பொழுது இராக்ஷஸன், அவன் நந்தவமிசத்திற் சேர்ந்தவனென்ற அபிமானங்கொண்டு, அவனைச் சமாதானஞ் செய்து அவனுக்கு அமைச்சனு யமர்தலுங் கூடும். அதுபொ ழுது நீங்கள் இச்சேனாதிபதிகளிடம் நம்பிக்கை வையாதொழி வீர்கள். அதைக் கருதியே அவர்கள் முன்னெச்சரிக்கை யாக இவ்வனம் கூறினார்கள்" என்றான்.

மலயகேது அதைக் கேட்டு, "இராக்ஷஸன் யோக்கியன்; அவன் அவ்வாறு செய்யான். அவர்கள்தான் சூதர்கள். இப் பொழுது நமது நகரத்திற்குள் பகைவருடைய ஒற்றர்கள் வந்து நமது சேனாதிபதிகளையும், மற்றைய உத்தியோகஸ்தர்

களையும் மனம் பேதிக்கச் செய்கின்றனர். ஆதலால் இன்று முதல் நமது நகரத்திலிருந்து பாடலிபுத்திரஞ் செல்கின்றவர்கள் எவரும் அனுமதிச் சீட்டின்றி செல்லுதல் கூடாது. இதனை முரசறைந்து நகரமாந்தர்க்குத் தெரிவித்து, இனிச் செல்லும் பிரயாணிகளுக்கு நீயே நமது அரசாங்க முத்திரையிட்ட சீட்டைக் கொடுத்துவருவாய்" எனப் பாகுராயணனுக்கு ஆஞ்ஞையிட்டனன். அவனும் அவ்வாறே அகநகர் புறநகரெங்கும் அறிவித்து அநுமதி சீட்டளிக்கும் காரியத்தைப் பார்த்துவந்தான்.

அதுகாலை இராக்ஷஸன், ஜீவசித்தி என்னும் பெயர்புனைந்த பௌத்த சந்நியாசியை யழைத்து, "யுத்த யாத்திரைக்கு நல்ல முகூர்த்தம் பார்த்துச் சொல்" எனலும், அச்சந்நியாசி ஆராய்ச்சி செய்து ஒரு முகூர்த்தத்தை நிச்சயித்து, 'இது நன் முகூர்த்தம்' என ஒரு நாளைக் குறிப்பிட்டனன். இராக்ஷஸன், "இது சரியான முகூர்த்தமா என்பதை வேறு சோதிடர்களிடம் கூறி அறிந்து வா" என்றனன். அதைக்கேட்டு ஜீவசித்தி, "எனது சாஸ்திர நிபுணிகத்தை யறிந்திருந்தும், நீ இவ்வாறு சந்தேகித்தல் ஏனோ? எனது யோக்கியதைக்குத் தகுந்தபடி நடவாத உன்னிடம் இனி நான் இருப்பது தகாது" என்று கோபத்துடன் கூறி வெளியே சென்றனன்.

அதே சமயம், சித்தார்த்தகன், இராக்ஷஸனுடைய முத்திரையிட்ட ஒரு நிரூபத்தையும், ஆபரணாதிபொருள்களையும் சகடதாசனிடமிருந்து பெற்றுக்கொண்டு பாடலிபுத்திரநகரை நோக்கிப் புறப்பட்டான். அவன் க்ஷபணகனைக் கண்டு வந்தனை செய்தனன். க்ஷபணகன், அவனைப் பார்த்து, "நீ எங்கே பிரயாண சித்தனாய்ப் புறப்பட்டாய்?" என்று கேட்டனன். அதற்கு அவன், "நான் பாடலிபுத்திரம் போகின்றேன்" என்றான். க்ஷபணகன், "பாடலிபுத்திரஞ் செல்கின்றவர்கள்

பாகுராயணனிடஞ்சென்று அநுமதி சீட்டுப் பெற்றுப்போக வேண்டும். அங்ஙனம் பெறுதவர்கள் அந்நகருக்குச் செல்ல லாகாது. இது அரச ஆஞ்ஞை, தெரியுமா?" என்றனன். அதற்குச் சித்தார்த்தகன், "நான் அமாத்திய இராக்ஷஸனைச் சேர்ந்த மனிதன். நான் ஏன் அச்சீட்டுப் பெறவேண்டும்" என்றான். க்ஷபணகன், "இராக்ஷஸனைச் சேர்ந்த மனிதர் களாயிருந்தாலும் அநுமதி சீட்டுப் பெறுமற் போகக் கூடாது" என்றான்.

இவ்விருவரும் இவ்வாறு உரையாடிக்கொண்டு போகும் பொழுது, ஜீவசித்தி சித்தார்த்தகனைவிட விரைவாக நடந்து பாகுராயணனிருக்குமிடஞ்சென்று தனக்கு அநுமதி சீட்டுக் கொடுக்கும்படி கேட்டனன்.

பாகுராயணன் :—நீர் இராக்ஷஸனது நலத்தை யுத்தேசித்துப் போகின்றீரா?

ஜீவசித்தி :—இராக்ஷஸனும், பிசாசும்!

பாகுரா :—சிநேகிதர்மீது இவ்வளவு கோபமா? அவர் உமக்கு என்ன அபராதஞ் செய்தார்?

ஜீவசி :—இராக்ஷஸன் எனக்கு ஒரு அபராதமுஞ் செய்ய வில்லை. ஆனல், நான் அவனல் பாவியானேன். செய் யத்தகாத வேலையைச் செய்தேன். அதைக் குறித்துத் தான் இருவருக்கும் மனம் வேறுபட்டது.

பாகுரா :—க்ஷபணக! அச்சங்கதி என்ன?

ஜீவசி :—நான் அதைக் கூறேன்.

பாகுரா :—ஆனல் நான் சீட்டுக் கொடேன்.

ஜீவசி :—இதென்ன சங்கடம்! இதைக் கூறுவதற்கு இது சமயமில்லையே. சொல்லியே தீரவேண்டுமோ? சரி, இராக்ஷஸன் நன்மையின் நிமித்தம், நான் விஷ கன்னி கையை மந்திர பலத்தினல் உண்டாக்கித் தந்தேன். அவன் அக்கன்னிகையைக் கொண்டு பர்வதேஸ்வரனைக்

கொன்றுவிட்டான். அப் பாபமே என்னை இப்பொழுது பாதிக்கிறது.

பாகுரா:—இஃதென்ன ஆச்சரியம்! பூர்வம் அர்த்தராஜ்யம் அளிக்கிறேனென்று ஆசை காட்டி அழைத்துச் சென்ற சாணக்கியன், அங்ஙனம் கொடுக்க நேர்ந்தபோது அவனே அப் பர்வதேஸ்வரமன்னனைக் கொன்றதாக வல்லவோ வதந்தி. அப்படி யிருக்க நீர் என்ன புதுமையாகக் கூறுகின்றீரே!

ஜீவசி:—(இரு செவியையும் மூடிக்கொண்டு) பாவம்! அநியாயம்! சாணக்கியன் 'விஷ கன்னிகை' என்ற பெயரைக் கூடக் கேட்டறியானே. அவன் மேல் அப்பழியேற்றிக் கூறுவோர் பாபத்தைத்தான் மூட்டை கட்டிக்கொள்ளவேண்டும்.

இங்ஙனம் ஜீவசித்தி கூறியதும், பாகுராயணன் அவனுக்கு அநுமதி சீட்டொன்று அளித்து, "நீ இச்சங்கதியை இறைவனிடம் கூறியபின் போகலாம், வா" என்று கூறி மலயகேதுவினிடம் அழைத்துப்போய் அவனைக்கொண்டு முன் நடந்த வரலாற்றை அறிவித்தனன். அதைக் கேட்டதும் மலயகேதுவுக்குத் துக்கம் மேலும் மேலும் பெருகிற்று. அவன், "மித்திரா! பாகுராயணா! அந்த க்ஷபணகனுக்குப் போக விடைகொடு" என்று கூறி, துக்கத்துடன் 'இராக்ஷஸா! உன் பெயர் உனக்குத் தகும்! எல்லாவற்றிற்கும் உன்னை நம்பியிருந்த எனது தந்தையைக் கொன்றாயே!" என்று வாய்விட்டலறினான்.

அப்பொழுது பாகுராயணன், 'அரசன் தன் தந்தை இறந்த வரலாறறிந்து பெரிதுந் துக்கங்கொண்டிருக்கின்றான். அவன் இத்துக்காவேசத்தினால் இராக்ஷஸனை மடித்தலுங் கூடும். சாணக்கியனோ, இராக்ஷஸனுக்குப் பிராணச்சேதம் உண்டாகாதவாறு மலயகேதுவினின்றும் பிரிக்க அறிவித்

திருக்கின்றான். அதற்குப் பழுது வரா வண்ணம் பார்த்துக்கொள்ள வேண்டும்' என்று மனதிற்குள் நிச்சயித்து, மலயகேதுவைப் பார்த்து, "மன்னனே! துக்கிப்பதை விடு. கோபத்திற்கு இது சமயமல்ல. துராத்மாவாகிய அவ்விராக்ஷஸனை இப்பொழுது தண்டித்தல் கூடாது. முன்னம் உயிரோடிருந்த சர்வார்த்தசித்திக்கு முடிசூட்டுவதற்காக, அவன், சந்திரகுப்தனுக்குப் பேருதவியாயும், அவனைப்போல் பாதிநாட்டிற்குப் பங்காளியாயுமிருந்த நினது தந்தையைக் கொன்றான். இப்பொழுதோ சர்வார்த்தசித்தி கொல்லப் பட்டமையால், முன்போல அவ்வாறு சந்தேகிப்பதற்கிட மில்லை. அடாது செய்த அவ்வமாத்திய இராக்ஷஸனை, நந்த ராஜ்யம் நமக்குக் கிடைக்கும்வரை நாம் நேசித்திருப்போம். அதன் பின்பு, அவனைக் கொள்ளுவதோ தள்ளுவதோ செய்வோம்' என்றான். அதற்கு மலயகேது, "நீ கூறியது சரியே. இராக்ஷஸனைத் தண்டிக்காமல் விட்டால், அதற்குள் அவன் நமக்குக் கேடு சூழ்வானோ என்னவோ? அவனால் நமக்கு வெற்றிகிடைக்குமென்பதும் சந்தேகந்தான்" என்றான்.

இவ்வாறு இருவரும் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, சேனாதிபதிகளில் ஒருவனான தீர்க்கசக்ஷுண்டன் என்பவன் வந்து, "இந்த மனிதன் அநுமதி சீட்டுப் பெறாமல், கையில் ஒரு கடிதத்தை எடுத்துக்கொண்டு நமது நகரத்தினின்றும் வெளியே போகும்பொழுது, நான் பார்த்துப் பிடித்துவந்தேன்" என்று கூறிச் சித்தார்த்தகனை அரசன் சமூகத்தில் விட்டான். அப்பொழுது சித்தார்த்தகன் மிகப் பயந்தவன் போல நடித்து நின்றுகொண்டிருந்தான். அவனைப் பாகுராயணன் நோக்கி, "அடே, நீ யார்! பரதேசத்தானா? சுதேசத்தானா? அல்லது எவரிடத்திலாவது சேவகஞ் செய்யும் சேவகனா? சொல்" என்று கேட்டதும், அவன், "நான் அமாத்திய இராக்ஷஸனுடைய சேவகன்" என்றான்.

பாகுராயணன் :—நீ அநுமதி சீட்டுப் பெருமல் எங்குப் போகின்றனை ?

சித்தார்த்தகன் :—ஓர் அவசரமான காரியத்தின் நிமித்தம் வேகமாகப் போகின்றேன்.

பாகுரா :—அது என்ன அவசர காரியம் ?

சித்தார் :—கௌரவ காரியநிமித்தம் போகின்றவர்கள் இங்ஙனம் பகிரங்கமாகக் கூறுதல் கூடாது. இது எங்கள் தலைவனது ஆஞ்ஞை.

பாகுரா :—அடே சேவகா ! நீ என்ன அரச ஆஞ்ஞையை அலட்சியஞ் செய்கின்ருய் !

இவ்வாறு பாகுராயணன் அதட்டிக்கேட்டபொழுது, மலயகேது, பாகுராயணனைப் பார்த்து, "அவன் கையிலிருக்கும் அக்கடிதத்தை வாங்கு" என்றனன். அவன் சித்தார்த்தகன் கையிலிருந்த கடிதத்தை வாங்கி, முத்திரையைப் பார்த்து, "மன்ன ! இக்கடிதத்தில் இராக்ஷஸனுடைய முத்திரை யிட்டிருக்கின்றது" என்றனன். அதற்கு மலயகேது, "ஆனல் அம்முத்திரை கெடாமல் அக்கடிதத்தைப் பிரித்து என்னிடம் கொடு" என்றதும், அவன் அங்ஙனமே பிரித்து அதனை அரசன் கையில் நீட்டினன். அரசன் அதைப் பெற்று வாசிக்கலாயினன். அதில்

'எங்கேயோ ஓரிடத்திலிருக்கும் ஒருவர், தனது மித்திரரான ஒருவருக்கு எழுதியது என்னவென்ருல், என்னிடமுள்ளார் யாவரும் க்ஷேமம். எனது சத்துருவாகிய சாணக்கியனை நிராகரித்தால் சத்திய சந்தராகிய தாங்கள் கூறுகிறபடி சத்தியமாய் நடக்கிறேன். இப்பொழுது நமது பக்கம் சேர்ந்திருக்கும் நண்பர்களிடம் வாக்குறுதி செய்தபடி அவர்களுக்குப் பொருள்களைக் கொடுத்து அவர்களை மகிழ்விக்க வேண்டும். அவர்களும் தங்கள் ஆஞ்ஞைப்படி சத்துரு இடங்களை

ஜெயித்துத் தங்களுக்கு உபகாரியாவதற்கு மிகவும் விரும்பி யிருக்கின்றனர். அவர்களில் சிலர் பகைஞ னின் படையாதி பொருள்களையும், சிலர் நாடு நகரங் களையும் கேட்கின்றனர். நாமும் அவர்கள் வேண்டிய வேண்டியாங்களித்துத் திருப்தி செய்வோம். தவிர, தாங்கள் கொடுத்தனுப்பிய விலையுயர்ந்த மூன்று ஆபர ணங்களும் சேர்ந்தன. நானும், இந்நிரூபத்தினை என் னுடையதென்று அறிய, அரிய ஆபரணமொன்று அனுப்பி யிருக்கின்றேன். பெற்றுக் கொள்ளவும். மற்ற சமாசாரங்களை எனது மித்திரன் சித்தார்த்தகன் சொல் லுவான், தெரிந்துகொள்ளவும்.'

என்று எழுதியிருந்தது. இதை வாசித்து மலயகேது மிகுந்த ஆச்சரியமடைந்து, "பாகுராயணா! இக்கடிதத்தின் சமா சாரத்தைக் கேட்டாயல்லவா! இது யார் எழுதியது?" என்று கேட்டான்.

பாகுராயணன் :—(சித்தார்த்தகனை நோக்கி) இக்கடிதம் யார் எவருக்கு எழுதியது?

சித்தார் :—எனக்குத் தெரியாது.

பாகுரா :—திருடா! கடிதத்தை எடுத்துக்கொண்டு போகிற நீ, எனக்குத் தெரியாதென்றால் எவரேனும் நம்புவாரா? மேலும், கடிதத்தில் மற்ற சமாசாரங்கள் மித்திரன் சித் தார்த்தகனால் தெரியவரும் என்று எழுதியிருக்கின்றதே. அப்படி யிருக்க, உனக்கு எப்படித் தெரியாமலிருக்கும்?

சித்தார் :—அதனை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள். நான் எப்படி யறிவேன்?

இவன் இங்ஙனம் கூறவே, பாகுராயணன் மிகுந்த கோப மடைந்து கொத்தவாலை யழைத்து, "இவனை எத்தனை தடவை கேட்டாலும் இவன் எனக்குத் தெரியாது என்கி றான். 'மயிலே, மயிலே' என்றால் மயில் இறகு கொடுக்குமா?

அதனை அழுத்திப் பிடுங்கினாலல்லவோ அது இறகு கொடுக்கும். அது போல இவனை மரியாதையாகக் கேட்டால் இவன் மனத்திலிருக்கும் உண்மை வெளி வருமோ? ஒரு காலும் வாராது. ஆதலால் இவனை வெளியழைத்துச் சென்று நையப் புடையுங்கள். அப்பொழுது உண்மை வெளிவரும்" என்றான். அவனும் அவனை அவ்வாறே செய்ய, அவன் கக்கத்திலிருந்து ஒரு பெட்டி கீழே விழுந்தது. அப்பெட்டியைக் கொத்தவாலெடுத்து உள்ளே சென்று பாகுராயணனிடம் கொடுத்து, 'இது இம்மனிதன் கக்கத்திலிருந்தது' என்றான். பாகுராயணன் அப்பெட்டியை வாங்கி, "மன்னனே இப் பெட்டியின்மீது இராக்ஷஸனுடைய முத்திரை யிட்டிருக் கிறது" என்றான். அப்பொழுது மலயகேது, 'இது கடிதத்தில் நம்பிக்கைக்கென்று குறிப்பிட்டிருந்த நகையை அடக்கஞ்செய்திருக்கும் பெட்டிபோலும்' என்று கருதி, பாகுரா யணனைப் பார்த்து, "பெட்டிமீதிட்டிருக்கும் முத்திரை கெடாதவாறு அப்பேழையினைத் திறந்து பார்" என்றனன். அவனும் அவ்வாறே திறந்து அதிலிருந்த ஆபரணமொன்றைக் கையிலெடுத்தனன். மலயகேது அவ்வாபரணத்தைப் பார்த்ததும், "பாகுராயணா! இவ்வாபரணம் ஒரு காலத்தில் நான் எனது தேகத்திலிருந்து கழற்றி இராக்ஷஸனுக்குப் பரிசாக அளித்ததாகும். இதனையே அவன் சந்திரகுப்தன் நம்பிக்கைக்காக அனுப்பி யிருக்கின்றான் என்பது நன்கு விளங்குகின்றது" என்றான். பாகுராயணன், "இந்த மட்டும் வெளிவந்ததல்லவா! இன்னும் அவனை நன்றாகப் புடைத்து எல்லாச் சமாசாரங்களையும் வெளிவரச் செய்யவேண்டும்" என்றான். இதைக் கேட்டுச் சித்தார்த்தகன், "ஐயா, நான் நன்றாயடிபட்டேன். இனி என்னை யடிக்க வேண்டாம். எல்லா சமாசாரங்களையும் ஒளிக்காமல் மன்னனிடங் கூறிவிடுகிறேன்" என்று கூறிக்கொண்டு, மலயகேதுவினது பாதத்தில்

விழுந்து, அவன் காலைப் பிடித்துக்கொண்டு, “ அபயந் தந்து என்னைக் காப்பாற்றவேண்டும்” என்று வேண்டிக்கொண்டனன். மன்னனும் “ அப்படியே யாகட்டும். உண்மையைச் சொல் ” என்றனன்.

உடனே சித்தார்த்தகன், “ மன்னர் மன்ன! அமாத்திய இராக்ஷஸன் கடிதமொன் றெழுதி என்னிடம் கொடுத்து அதனைச் சந்திரகுப்தனிடம் சேர்ப்பிக்கச் சொல்லினன். அப்பொழுது வாய்மொழியாகக் கூறிய சமாசாரம் யாதெனில்: ‘ எனக்கு முக்கிய சிநேகிதர்கள் ஐவர் : அவர்கள் குலூதாதிபதி சித்திரவர்மன், மலயதேச மன்னன் சிம்மநாதன், காஷ்மீரதேசாதிபதி புட்கராக்கன், சிந்துதேசத்தரசன் சிந்துசேனன், பாரசிகக் கோமகன் மேகாக்ஷயன். இவர்களில் முற்கூறிய மூவர் மலயகேதுவினது தேசத்தையும், மற்ற இருவர் அவனது கரி பரி தேர் காலாள் கருந்தனம் முதயவற்றையும் விரும்புகின்றனர். ஆதலால், தாங்கள் எனது விரோதியாகிய சாணக்கியனை நிராகரித்து என் மனதைத் திருப்தி செய்யுங்கள் ; அப்பொழுதே அவ்வைவரையுங்கொண்டு பகைவனைப் போக்கித் தங்கள் மனோபீஷ்டத்தைப் பூர்த்தி செய்கிறேன் ’ என்பதே யாகும். இதுதான் உண்மையான முழு சமாசாரம் ” என்றனன்.

அதைக் கேட்டு மலயகேது தன் மனத்திற்குள், ‘ஆஹா, நமது நண்பர்களா யிருந்த சித்திரவர்மாதியோர் நமக்குத் துரோகம் நினைத்தார்களல்லவா! சாதாரண நண்பனுன இராக்ஷஸன் மீது நான் சாலப் பிரியம் வைத்துச் சகல காரியங்களையும் அவனிடம்ஒப்புவித்ததனுலல்லவா மித்துருவா யிருந்தவரும் சத்துருவானுர்கள்?’ என்று சிந்தித்து, பின்பு ஏவலாளரை யழைத்து, ‘ இராக்ஷஸனை என் சமூகம் அழைத்துவாருங்கள் ’ எனக் கட்டளையிட்டனன். அவர்கள் இராக்ஷஸனிடஞ் சென்று அரசன் ஆஞ்ஞையைத் தெரிவித்தனர்.

அப்பொழுது இராக்ஷஸன், பாடலிபுத்திரத்தி னின்றும் வந்த ஒற்றர்களால், சாணக்கிய சந்திரகுப்தரது விரோத வரலாற்றினை யறிந்து அகங்களித் திருந்தான். அக்களிப்பில் அவன் விப்பிரர்களிடம் முன் வாங்கிய ஆபரணங்களை எடுத்துத் தரித்துக்கொண்டு மனமகிழ்ச்சியுடன் மன்னன் மலயகேதுவைக் கண்டான். மலயகேது, அவன் தரித்த ஆபரணங்களைக் கண்டு கோபமுற்று, 'இவை என் தந்தை தரித்துக்கொண்டிருந்தனவல்லவா' என்று மனத்திற்குள் எண்ணி, எழுந்த கோபத்தை யடக்கிக்கொண்டு அவனைப் பார்த்து, 'யுத்த முயற்சி எப்படி யிருக்கிறது ?' என்று வினவினன்.

இராக்ஷஸன் :—அரசே! சாகசத்தில் வல்ல சாணக்கியன் மந்திரி பதவியினின்றும் விலகியது நமக்கு அநுகூலமே. நமது மித்திரர்களான அரச ரெல்லோருக்கும் யுத்த யாத்திரை செய்ய ஆஞ்ஞாபித்துவிட்டேன்.

மலயகேது:—பாடலிபுத்திரத்திற்கு எவரேனும் போய்வருகின்றாரா ?

இராக்ஷ :—இப்பொழுது பாடலிபுத்திரத்திற்குப் போவாருமிலர் ; ஆண்டிருந்து வருவாரு மிலர். இன்னுஞ் சில தினங்களில் நாமே ஆங்கு போய்ச் சேருவோம்.

மலயகேது :—அங்ஙனமானால் இம்மனிதனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து எதற்காகப் பாடலிபுத்திரம் அனுப்பினை ?

இராக்ஷ :—(சித்தார்த்தகனைப் பார்த்து) என்ன இது ?

சித்தார் :—(தலை குனிந்து) ஐயா ! என்னை மன்னியுங்கள். நான் என்ன செய்வேன். என்னை அடிமேல் அடியடித்து உண்மையைச் சொல் என்றார்கள். அடிக்குப் பயந்து இரகசியத்தைச் சொல்லிவிட்டேன்.

இராக்ஷ :—சித்தார்த்தகா ! நம் இருவருக்குள் இரகசியம் என்ன வந்தது ?

சித்தார் :—அது தங்களுக்கே தெரியும்.
இராக்ஷ :— என்னடா பிதற்றுகின்றனே.

இராக்ஷஸன் கடுகடுத்துக் கூறலும் சித்தார்த்தகன் மறுத் தொன்றும் வாய் திறவாமல் மௌனமா யிருந்தான். அப் பொழுது மலயகேது, பாகுராயணனைப் பார்த்து, “ இம்மனி தன் தன் தலைவன் முன்னிலையில் பேசுவதற்குப் பயப்படுகி றான். ஆதலால் அவன் முன் நமது சமுகத்தில் உரைத்த படி நீயே அவருக்குக் கூறும் ” என்றான்.

அவன் இராக்ஷஸனைப் பார்த்து, “ அமாத்திய ! சித்தார்த்தகன், ‘ இராக்ஷஸன் என்னிடத்தில் சந்திரகுப்த னுக்கு ஒரு கடிதம் கொடுத்துச் சில இரகசியங்களையும் அவனுக்குக்கூறும்படி வாய்மொழியாகவும் சொல்லியனுப் பினர்’ என்றான் ” என்றுரைத்தனன். அதைக் கேட்டு இராக்ஷஸன், “ சித்தார்த்தகா ! இது சத்தியமா ?” என்று அவனை நோக்கிக் கேட்க, அவன், “ எனக்குத் தெரிந்த இரகசியத்தை நான் சொன்னேன் ” என்று மிகவும் பயந்த குரலுடன் சொன்னான். இராக்ஷஸன் அம்மொழி கேட்டு மிகவும் பிரமையடைந்து, “ அரசே ! இது ஏதோ மோசமா யிருக்கிறது ” என்று அரசனை நோக்கிக் கூற அர சன், “ஆனால், பெட்டியின் மீதும் கடிதத்தின் மீதும் இட்டி ருக்கும் முத்திரை எவருடையது ?” என்று கேட்டான். அவன், “திருடர்கள் போலி முத்திரையையும் உண்டாக்கக் கூடும்” என்றான். அப்பொழுது பாகுராயணன், சித்தார்த் தகனை, நோக்கி “சித்தார்த்தகா ! இக் கடிதம் யார் எழுதி யது உனக்குத் தெரியுமா ? ” என்று வினவினன். அதற்கு, அவன், “ சகடதாசன் எழுதியது ” என்று பதில் கூறினன். அதைக் கேட்டதும் இராக்ஷஸன், “இது உண்மையாகச் சகடதாசன் எழுதியதானல் அத்தப்பு என்னுடையதே யா கும் ” என்றான்.

இராக்ஷஸன் அங்ஙனம் கூறவே, மலயகேது "சந்தேகம் எதற்கு? சகடதாசனை அழை" என்றான். அதற்குப் பாகுராயணன், "மன்னர் பெருமானே! சகடதாசன் இராக்ஷஸன் எதிரில் ஒருகாலும் உண்மையைச் சொல்லான்; அவனை யழைத்துக் கேட்பதிலும், அவன் எழுதிய கடிதம் வேறு ஏதாவதிருந்தால் அதைக் கொண்டு ஒத்திட்டுப்பார்த்துத் தெரிந்துகொள்ளலாம்" என்றனன். அரசன், "அங்ஙனம் செய்வதும் யுக்தமே. அதனுடன் முத்திரையையும் வரவழை" என்றனன். அவன் அங்ஙனமே வரவழைத்து அவற்றை அரசனிடம் கொடுத்தனன்.

அரசன் அவற்றைப் பெற்று, இராக்ஷஸனை அருகழைத்து, "ஆர்ய! இவ்வெழுத்துக்களையும் முத்திரையையும் பார்" எனலும், இராக்ஷஸன், "இப்பொழுது நான் அநார்யன். எனக்குத் தெய்வங்கூட இப்பொழுது பிரதிகூலஞ் செய்கிறது. நான் எது சொன்னாலும் அஃதெல்லாம் உண்மையாகாது" என்றனன்.

அதைக் கேட்டதும் மலயகேது அதிக கோபமுற்று, "ஆமாம்! விஷகன்னிகையை ஏவி என் தந்தையைக் கொன்ற பாவியாகிய உன்னை, இதுவரையில் மந்திரி பதவியில் வைத்திருக்கும் தெய்வம், இப்பொழுது உனக்குப் பிரதிகூலமாகி எனக்கு அநுகூலமா யிருக்கின்றது உண்மைதான்" என்று கூறிச், சேனாதிபதிகளை யழைத்து, "என் தேசத்தையடைய விரும்பிய குலூதாதிபதி முதலிய மூவேந்தரை மண்ணிற் போட்டுப் புதையுங்கள்; கரிபரி முதலியவற்றைக் காதலித்த சிந்து பாரசிகாதிபதிகளைக் கரியின் காலில் போட்டு மிதிக்கச் செய்யுங்கள்" என்று ஆஞ்ஞையிட்டனன். அச்சேனாதிபதிகளும் அங்ஙனமே செய்து அதை அரசனுக்கு அறிவித்தனர். அதன் பின்பு அரசன், இராக்ஷஸனைப் பார்த்து, "மௌரிய புத்திரனும் சாணக்கியனும் நீயும் ஒன்றாகச்

சேர்ந்துகொண்டு எதிர்த்தாலும் மலயகேது உங்களையெல் லாம் ஒரு நொடிப்பொழுதில் நிர்மூலஞ்செய்து போடுவான் என்பதை நீ திண்ணமாயறி" என்று கோபாவேசத்துடன் கூறினன். அப்பொழுது பாகுராயணன், "சுவாமி, காலந் தாழ்த்தாமல் சத்துருமீது போருக்கெழ வேண்டும். இப்பொ ழுது யார்மீதும் கோபித்துக்கொள்ள வேண்டாம்" என்று ரைத்து, இரகசியமாக, "இப்பொழுது அவனை ஒன்றும் செய்யக்கூடாது. அதில் நமக்கு நன்மை யிருக்கிறது" என்று போதித்து அவனை உள்ளே அழைத்துச் சென்றனன்.

பின்பு இராக்ஷஸன், தன் மனதிற்குள் துக்கித்து, "ஆ! என்ன ஆச்சரியம்! பிள்ளையார் பிடிக்க அது குரங்காய் மாறினதுபோல, நான் சத்துரு நாசத்திற்குச் செய்த முயற்சி யெல்லாம் வீணாகி அவனுக்கே அவை அநுகூலத்தைத் தந் தன. எனது அரிய தலைவரான சர்வார்த்தசித்தியும் நவநந் தர்களும் மற்றைய நண்பர்களும், மாய்ந்தொழிந்தனர். மித் திருவாயிருந்தவர்களும் சத்துருவானார்கள். நான் செய் யும் முயற்சிகளெல்லாம் எனக்கே அயர்ச்சியைத் தருகின் றன. இனி நான் என்ன செய்யக்கூடும்? காட்டிற்குச்சென்று காய் கனி புசித்துத் தவம்மேற்கொள்ளலா மென்றாலோ, பகை சூழ்ந்த மனம் பகவத்தியானத்தைப் பற்றாது. அதை விட்டு, நமது தலைவர்கள் சென்றவழி நாமும் செல்லலாமென்றாலோ, அஃது பெண்பாலர் தர்மமேயன்றி ஆண்பாலர் தர்மமன்று. கடைசியில் கத்தியைக் கையிற் பற்றிச் சத்துருவைக் கொன்று நண்பன் சந்தனதாசனை விடுவிப்பதே சிறந்ததாகும்" என்று தீர்மானித்து, பாடலிபுத்திர நகருக்கு வெளியேயுள்ள ஒரு வனத்தைப் போயடைந்தனன்.

அவன் அங்ஙனஞ் சென்றபின், ஜீவசித்தியும் சித்தார்த் தகனும் சாணக்கியனிடஞ் சென்று, ஆங்கு நிகழ்ந்த எல்லாச் செய்தியையும் எடுத்துக் கூறினர். சாணக்கியன் அதுகேட்டுச்

சந்தோஷமடைந்து, ஒரு மனிதனை யழைத்து, "இராக்ஷஸன் இப்பொழுது எங்கே யிருக்கிறானென்பதைத் தேடியறிந்து வா" என்று கட்டளையிட்டனன். அம்மனிதன் அங்ஙனமே சென்று தேடியறிந்து சாணக்கியனிடம் வந்து, "இராக்ஷஸன் இந்நகரின் புறமாயுள்ள வனத்திலிருக்கிறான்" எனத் தெரிவித்தனன்.

இது இங்ஙனம் நிற்க, இராக்ஷஸன் தன் நகரைவிட்டு வெளிச்சென்றதும் மலயகேது, தனது நால்வகைப் படைகளைக் கூட்டிக்கொண்டு பாடலிபுத்திரஞ் சென்று அதனை முற்றுகையிட்டனன். அதனை யறிந்த சாணக்கியன் அதிக சேனைகளை யழைத்துக்கொண்டுபோய்ச் சத்துரு சேனைகளின் மீது பாய்ந்து, அவர்களை அதஞ்செய்து அவர்களுடைய இரத கஜதுரகாதிகளைத் தன் வசப்படுத்தி வெற்றிமுரசு வெடியென முழங்க நகரப்பிரவேசம் செய்தனன். மலயகேதுவினது சேனைகளெல்லாம் மாண்டதும், மெய்ந்நண்பர்போல் நடித்து வந்த பாகுராயணன் பத்ரபடன் முதலியோர் மலயகேதுவைக் கட்டிப் பிடித்துப் பாடலிபுத்திர நகருக்குக் கொண்டு வந்தனர்.

---

## அத்தியாயம் 12

### சாணக்கியன் சபதபூர்த்தி

சாணக்கியன் இவ்வாறு மலயகேதுவை வென்றபின், இராக்ஷஸனையும் தன் வயப்படுத்தக் கருதிச் சித்தார்த்தகன் சமித்தார்த்தகன் எனும் இருவரை யழைத்து, சந்தனதாசனைத் தூக்கிடுவதற்குக் கொலையாளிகளைப்போல் வேடந்தரித்துக்கொள்ள ஆஞ்ஞாபித்தனன். அவர்களும் அவன் ஆஞ்ஞைப்படியே வேடந்தரித்து வர, அவர்களுக்குச் சாணக்கியன் சில இரகசியமொழிகள் கூறி, சந்தனதாசனைத்

தூக்கிடுமிடத்திற்கு அழைத்துப் போகக் கட்டளையிட்டனன். அவ்விருவரும் 'அங்ஙனமே' எனக் கூறி வெளிப் போந்தனர்.

அதன் பின்பு சாணக்கியன், தனது சிநேகிதர்களில் ஒருவனை யழைத்து அவனுக்குச் சில இரகசிய வார்த்தைகள் கூறி அவனை இராக்ஷஸனிருக்கும் வனத்திற்கேகச் செய்தனன். அவனும் சாணக்கியனுரைத்தவாறே இராக்ஷஸனிருக்கும் வனத்திற்குச் சென்று, நண்பனைக் குறித்து வருந்தும் இராக்ஷஸன் காணும்படி மரக்கிளையொன்றில் மணிக்கயிறொன்று மாட்டிக் கழுத்தில் சுருக்கிட்டனன். அச்செய்கையினைச் சேய்மையில் நின்று பார்த்துக்கொண்டிருந்த இராக்ஷஸன், "யாரோ ஒரு மனிதன் கழுத்தில் கயிற்றைச் சுருக்கிட்டுத் தற்கொலை செய்துகொள்ள முயற்சிக்கின்றான். ஐயோ பாவம்! இவன் என் இவ்வாறு செய்துகொள்ள வேண்டுமோ? இவனுக்குற்ற துன்பம் யாதோ? தற்கொலை பாவமான காரியமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவே. இவன் என் இப்பாவத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். பாபகாரியம் புரிபவனை அது புரியாவண்ணம் நாம் தடுக்காது வாளாவிருத்தலும் பாவமான காரியமாகும்" என்று மனதிற்குள் எண்ணி, அம்மனிதன் சமீபமடைந்து, "ஐயா! நீரேன் கழுத்தில் சுருக்கிட்டுக் கொள்ளுகிறீர்" என்றான். அதற்கு அவன், "எனது நண்பனுக்கு நேர்ந்த துன்பத்தைப் பார்த்துச் சகிக்க முடியாமல் நான் சுருக்கிட்டுக் கொள்ளுகிறேன்" என்றான்.

இராக்ஷஸன் :—அந்நண்பன் யார்? அவனுக்குற்ற துன்பம் யாது?

அந்த மனிதன் :—எனது ஆவியை யொத்த நண்பன் விஷ்ணுதாசன், தனது பிராண சிநேகிதனாகிய சந்தனதாசனைத் தூக்கிடுவதற்குக் கொலையாளிகள் அழைத்துப் போவதைப் பார்த்து, 'அந்நண்பனுடைய பிராணன் பிரி

வதற்குமுன்னமே நான் அக்கினிப் பிரவேசஞ் செய்து என்னுயிரைப் போக்கிக் கொள்ளுகிறேன்' என்று கூறி நகர்ப்புறத்தே சென்றான். நான் அவ்விருவரது துன்பத்தைக் கண்டு ஆற்றாது என் ஆவியைத் துறக்க ஈண்டு வந்து இங்ஙனம் செய்துகொள்ளுகிறேன்.

இராக்ஷ :—சந்தனதாசனைத் தூக்கிடுவதற்குக் காரணம் என்ன?

அ - ம :—இராக்ஷஸனுடைய குடும்பத்தாரைத் தன் இல்லில் வைத்துக் காப்பாற்றியதின் நிமித்தம், பாபாத்மாவாகிய சாணக்கியன் குரோத புத்திகொண்டு, அப்பரமாத்மாவைத் தூக்கிடும்படி ஆஞ்ஞாபித்தனன்.

இராக்ஷ :—ஆஹா! சந்தனதாசன் துன்பங் கண்டு சகியாமல் விஷ்ணுதாசன் அக்கினிப் பிரவேசஞ் செய்கின்றான்! அவ்விரு உத்தமர்களது துக்கங் கண்டு ஆற்றாத இப்புண்ணிய புருடன் தன் இன்னுயிரைப் போக்கத் துணிகின்றான்! உலகத்தில் சிநேகிருந்தால் இப்படியல்லவோ இருக்கவேண்டும். சாது! வைசியகுல ரத்தினமே! சந்தனதாசா! வெகுகாலத்திற்கு முன், அபயமெனக் கூறித் தன்னை வந்தடைந்த அணிப்புறாவினுக்கு அபயந் தந்து ஆவியைக் காத்த சிபிவேந்தன் அவனியில் என்றும் அழியாப் புகழ்பெற்றான். நீயும், இக்காலத்தில் நண்பனுக்கு நன்மை செய்து அந்நரேந்திரன் சிபியே என்ன நீடு இசைபெற்றாய். (தன்முன் நிற்கும் மனிதனைப் பார்த்து) ஐயா, நீ துரிதமாகச் சென்று விஷ்ணுதாசன் அக்கினிப் பிரவேசஞ் செய்யாதவாறு தடுத்துவிடு; நான் போய்ச் சந்தனதாசனை மீட்கின்றேன்.

அ - ம. :—உம்மால் அவரை எப்படி மீட்கமுடியும்?

இராக்ஷ :—இதோ என் கையிலிருக்கிற கத்தியைப் பார்; இதைக் கொண்டு நான் மீட்பேன். நீ விரைவில் செல்.

அ - ம.—சுவாமி! கத்தி கட்டாரி முதலிய ஆயுதங்கள் வைத்திருப்பவர்களைத் தூக்கிடுமிடத்தில் விடமாட்டார்கள். முன்பு சகடதாசனைச் சித்தார்த்தகன் கொலைக்களத்தினின்றும் அழைத்துப் போனதிலிருந்து சாணக்கியன் அவ்விடத்தில் தகுந்த காவல் வைத்துக் கடுமையான உத்திரவு மிட்டிருக்கிறான். முன் சகடதாசனை யழைத்துச் சென்ற கொலைஞர்களையும் அவர்கள் அஜாக்கிரதைக்காகச் சிக்ஷித்திருக்கின்றான். அது முதல் கொலையாளிகள் குற்றவாளிகளைக் கொலைக்களத்தில் அதிக ஜாக்கிரதையுடன் பார்த்துவருகிறார்கள். ஆதலால் ஆயுதபாணிகளாக எவரும் அவ்விடத்திற்குப் போதல் இயலாது. அங்ஙனஞ் சென்றால் அவர்களைக் காவலர்கள் கொன்றுவிடுவார்கள்.

இராக்ஷ :—அப்படியானல் நான் நிராயுதபாணியாகவே சென்று அவனை மீட்கின்றேன். நீ காலதாமதஞ் செய்யாமல் விஷ்ணுதாசனிடம் போய் இதைச் சொல்லி அவன் அக்கினிப் பிரவேசஞ் செய்யாதபடி தடுத்துவிடு.

அ-ம.—சுவாமி! நான் அங்ஙனமே செல்கின்றேன். தாங்களும் விரைவில் செல்லுங்கள்.

அம்மனிதன் ஒருபுறம்விரைந்து செல்ல, இராக்ஷஸனும் நிராயுதபாணியாகவே கொலைக்களம் நோக்கிச் சென்றனன்.

அப்பொழுது சந்தனதாசனுக்குக் குற்றவாளியின் வேடத்தைத் தரித்து, வாள் வேல் முதலிய ஆயுதங்களைத் தரித்த சேனாதிபதிகள் சூழ்ந்துவரச் சித்தார்த்தக சமித்தார்த்தகராகிய போலிக் கொலையாளிகள் அவன் கைப்பற்றிக் கொண்டு, சாணக்கியனது ஆஞ்ஞைப்படி அருணோதய வேளைக்கு அவனைத் தூக்கிடுமிடத்திற்கு அழைத்துச் சென்றனர். இராக்ஷஸன் அவ்விடத்திற்குப் போகும்பொழுது அவனைக் கண்ட சந்தனதாசன் மனைவி, “ஐயோ! தங்களு

டைய சுகுணத்ம மித்திருக்கு இத்தகைய துர்மரணம் வந்ததே !'' என்று கூறி மிகவும் துக்கித்தாள். அதைக் கண்டு இராக்ஷஸன், 'பாபாத்மனுகிய என்னாலல்லவோ இவர்களுக்கெல்லாம் இத்துன்பம் வந்து வாய்த்தது' என்று தனக்குள் துக்கித்து, அந்த அம்மையைப் பார்த்து, “அம்மா! நீங்கள் விசனிக்க வேண்டாம். உமது கணவன் உயிரை மீட்கவே நான் வந்திருக்கின்றேன்' என்று கூறி, அவ்வம்மை பக்கமிருந்து துக்கிக்கும் குமாரனை நோக்கி, “அப்பா! நீ அழ வேண்டாம்; உன் தந்தை உன்னிடம் சீக்கிரம் வந்து உன்னை ஆதரிப்பார்'' என்று உரைத்துத் தேற்றித் தூக்கிடுமிடத்திற்குத் துரிதமாக நடந்து சென்றான்.

அது பொழுது, போலிக் கொலைஞர்கள் சந்தனதாசனைக் கட்டித் தூக்கிடுவதற்குக் கயிறுகளை ஆட்டி அபிநயித்துக் கொண்டிருந்தனர். இதைத் தூரத்திலிருந்து பார்த்த இராக்ஷஸன், துரிதமாக ஓடி வந்து அக்கொலைஞர்களைப் பார்த்து, “இச் சந்தனதாசன் கட்டை யவிழ்த்து இதில் என்னைக் கட்டித் தூக்குங்கள்'' என்றான். அதைக் கேட்ட சந்தனதாசன், “ஐயோ! அமாத்தியா! இராக்ஷஸா! என் நிமித்தம் நீ பிராணத்தியாகம் செய்வதற்கா உன்னை நான் இத்தனை நாள் சிநேகித்தது? உனக்கு இது வேண்டாம்” என்று கூறி, கொலைஞர்களைப் பார்த்து, “என்னைத் தூக்குங்கள்” என்றான். இராக்ஷஸன் சந்தனதாசனைப் பார்த்து, “பாபியாகிய நானே இதை அநுபவித்தற் குரியவன். நீ ஒன்றும் தடுத்துக் கூருதே; சும்மாயிரு” என்று உரைத்து, கொலைஞரைப் பார்த்து, “துர்ஜனனுக்கு நேர்ந்த துன்பத்தைக் காத்ததின் காரணமாகத் தன் இன்னுயிரை இழக்க முன் வந்த மஹோபகாரியாகிய சந்தனதாசன் உத்தமன்; அவன் குற்றவாளியல்ல. நானே துர்ஜனன்; நானே சகலருக்கும் சத்துரு; நானே குற்றவாளி; நானே அக்குற்றத்திற்குக் காரணன். என்னைத் தூக்குங்கள்;

அவனை விடுவியுங்கள்" என்றான். இதைக் கேட்டுக் கொலை யாளிகளி லொருவன் விரைவாக ஓடிச் சாணக்கியனிடம் நிகழ்ந்தன வெல்லாங் கூறினன்.

சாணக்கியன் இச்செய்தி கேட்டு இறும்பூதெய்தி, அது பொழுதே சந்திரகுப்தனிடஞ் சென்று, "சந்திரகுப்தா! நாம் இத்துணை தினங்களாக எக்காரியத்தை உத்தேசித்து இத்தனைத் தந்திரங்கள் புரிந்தோமோ அக்காரியம் இப்பொழுது கை கூடிற்று. நானும் கிருதார்த்தனானேன்" என்றுரைத்துப், பின்பு சேனாதிபதிகளை யழைத்து, 'இராக்ஷஸனை இராஜ சமு கத்திற்கு அழைத்து வாருங்கள்' என்று ஆஞ்ஞாபித்தனன். சேனாதிபதிகளும் அங்ஙனமே சென்று இராக்ஷஸனைப் பார்த்து, 'ஸ்ரீமதகண்ட பூமண்டல சாம்ராஜ்ய லக்ஷ்மிதுரந்தரரும், சகல திக் மண்டலாகத ராஜமண்டல கிரீட மாணிக்க ப்ரபா மண்டித சுந்தர பாதாரவிந்தருமாகிய தங்களுக்குத் தண்டஞ் சமர்ப்பிக்கும் சந்திரகுப்தன், தங்களை அழைத்து வர எங் களுக்குக் கட்டளை யிட்டனன்" என்று தெரிவித்தனர்.

இராக்ஷஸன் இத்தோத்திர மொழியைக் கேட்டு, 'ஆ! சத்துருவான சந்திரகுப்தன் இவ்வாறு தோத்திரம் செய்ய நமக்குக் காலம் வந்ததல்லவா? இதுவும் நமது விதியின் கூற்று' என்று தனக்குள் எண்ணி, அச் சேனாதிபதிகளைப் பின் தொடர்ந்து சந்திரகுப்தனது அரண்மனைக்குச் சென் றான். சாணக்கியன் இராக்ஷஸன், அரண்மனையுள் நுழைந்த தும், எதிர் சென்று, "வருக! வருக! மந்திரி இராக்ஷஸா! நான் விஷ்ணுகுப்தன். நமஸ்கரிக்கின்றேன்" என்று வணக் கஞ் செய்து நல்வரவு கூறினன். அப்பொழுது இராக்ஷஸன், சாணக்கியன் தன்னை 'மந்திரி இராக்ஷஸா' என்று விளித்த மைக்குப் பெரிதும் நாணி, அவனைப் பார்த்து, "விஷ்ணு குப்தா! நான் கொலையாளிகளாகிய சண்டாளரது கரஸ்பரிசத் தினால் தூஷிதனாயிருக்கின்றேன். என்னைத் தீண்டிக்கொள்

ளாதே" என்ருன். அதற்குச் சாணக்கியன், "இராக்ஷஸா! இவர்கள் சண்டாளர்களல்லர்: இவன் அரச வம்சத்தைச் சேர்ந்த சித்தார்த்தகன்; இராஜபுருஷன். இவன் உமக்குத் தெரிந்தவனே. இந்த இரண்டாவது மனிதனும் அவனுக்கு உறவினனுன இராஜபுருஷன். இவர்களில் சித்தார்த்தகன் தான், சகடதாசனிடங் கபட சிநேகஞ்செய்து அவன் இது இதைக் குறித்ததுதான் என்று அறியாவண்ணம் அவனைக் கொண்டு ஒரு கடிதம் எழுதி வாங்கி உம்மை மோசஞ் செய்தவன்" என்ருன்.

அதைக் கேட்டு இராக்ஷஸன், "ஆஹா! சகடதாசன் எனக்கு மோசஞ் செய்தானென்றல்லவோ எண்ணினேன். அவன் பரிசுத்தன். இப்பொழுதுதான் என் மனதும் நிம்மதியடைந்தது" என்ருன். சாணக்கியன் "அதிகமேன் பேச வேண்டும்? பாகுராயணன் பத்ரபடாதியோர், சித்தார்த்தகன், ஆபரணங்கள், வனத்தில் தூக்கிட்டுக்கொள்ள முயற்சித்தவன் ஆகிய இவர்களைக் கொண்டு இதுவரை செய்தனவெல்லாம் நின்னை இங்கு அழைத்துவருவதற்குச் சந்திரகுப்தன் செய்த தந்திரங்களே யாகுமன்றி வேறல்ல" என்ருன்.

இங்ஙனம் இவ்விருவரும் உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, "ஆயுதபலம் சேனைபலம் எதுவுமின்றிப் பலவந்தர்களாகிய பகைவர்களைப் புத்திபலமொன்றினுலேயே வென்ற எனது அரிய குருவே! நமஸ்காரம்" என்று கூறிக் கொண்டு, சந்திரகுப்தன் அந்தப்புரத்தினின்றும் அணி மண்டபம் வந்தான். சாணக்கியன் அவன் வருகையை அறிந்து, "அமாத்திய! இதோ சந்திரகுப்தனும் வருகின்ருன்" என்று கூறினன். சந்திரகுப்தனும் அங்கு வந்து சாணக்கியன் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தனன். சாணக்கியன், "அரசே! உனக்குக் சகல பாக்கியமும் உண்டாகுக" என்று ஆசிர்வதித்து, "அமாத்திய இராக்ஷஸர் உன்னிடம்

எப்பொழுது வந்தாரோ அப்பொழுதே நீ சகலபாக்கியமும் பெற்றவனானாய். இனி உனக்கு என்ன குறைவு ?" என்றான் அதைக்கேட்டு இராக்ஷஸன், "சந்திரகுப்தனுடைய சகலபாக்கியத்திற்கும் சாணக்கியனே காரணமா யிருக்க, அவன் தன்னைப் புகழ்ந்துகொள்ளாது என்னைப் புகழும் புத்தி சாமர்த்தியந்தான் என்னே!'' என்று தன் மனத்திற்குள் அவனை மெச்சிக்கொண்டிருக்கும் பொழுது, சாணக்கியன் சந்திரகுப்தனைப் பார்த்து, "நமது அமாத்திய இராக்ஷஸர் வந்தார், அவரை நமஸ்கரித்துக் கொள்'' எனலும், சந்திரகுப்தன் அமாத்திய இராக்ஷஸனை நமஸ்கரித்தான். அப்பொழுது அமாத்திய இராக்ஷஸன், " அரசே கொற்றங் கொள்வாய் '' என ஆசிர்வதித்தனன். சந்திரகுப்தன், "தாங்களும் எனது குருவும் இருக்கும்பொழுது எனக்கு ஜெயமுண்டாவதற்குச் சந்தேகமா ?" என்று அவன் ஆசீர்வாதத்தைப் புகழ்ந்து கூறினன். இராக்ஷஸன் சந்திரகுப்தனது விநயவசனத்திற்கு மெச்சி, ' இவனும் சாணக்கியனும் இவ்வாறு நம்மைப் புகழ்வதற்குக் காரணமென்ன ? ' என்று தனக்குள் சிந்தித்துக் கொண்டிருக்கும்பொழுது, சாணக்கியன் "அமாத்திய ! சந்தனதாசன் உயிரோடிருக்க நீ கோருகின்றனையா ?" என்று கேட்டனன். "அதற்கென்ன சந்தேகம் ?" என்று இராக்ஷஸன் பதிலிறுத்தனன். அப்பொழுது சாணக்கியன், " அரசன் சந்திரகுப்தன் உனது மந்திரித்துவத்தை விரும்புகின்றான். நீ மந்திரித்துவத்தை ஏற்றுக்கொண்டால் சந்தனதாசனது உயிருக்கு ஹானியில்லை '' என்றனன். இராக்ஷஸன் சிறிது நேரம் ஆலோசித்து மந்திரித்துவத்தை ஏற்றுக் கொண்டனன்.

இஃதிங்ஙனமிருக்க, சில ராஜபுருஷர்கள் சாணக்கியன் சமுகம் வந்து, "சுவாமி! பத்ரபடன் பாகுராயணன் முதலியோர் மலயகேதுவைக் கட்டிக்கொணர்ந் திருக்கின்றனர். அவனை

யாது செய்வது ? " என்று விண்ணப்பித்துக் கொண்டனர். சாணக்கியன் "இதோ நமது மந்திரி இராக்ஷஸர் இருக்கிறார். அவரிடம் இதைச் சொல்லி அவருத்தரவுபோல் நடந்துகொள்ளுங்கள் " என்று அவர்களைப் பார்த்துக் கூறினன்.

அப்பொழுது இராக்ஷஸன், தனக்குள் சாணக்கியனது சமத்காரத்தை மெச்சி, சந்திரகுப்தனைப் பார்த்து, "நான் மலயகேது மன்னனிடம் நெடும்பக லிருந்தேன். அது தங்களுக்குத் தெரிந்ததே. அவன் இப்பொழுது தப்பு செய்திருந்தாலும் அதை மன்னித்து, அவனுக் கபயமளித்து அவனைக் காப்பாற்றும் " என்று சொல்லும்பொழுது, சந்திரகுப்தன் சாணக்கியனது முகத்தைப் பார்த்தான். அவன் அக்குறிப்பறிந்து, " இது நியாயமே " என்று கூறிச் சேனாதிபதிகளை அழைத்து, "மலயகேதுவைக் கட்டினின்றும் விடுவித்து அவனது தேசத்திற்கு அவனை யழைத்துக்கொண்டுபோய்ச் சிம்மாசனமேற்றிப் பண்டுபோல் பாரினைப் பரிபாலிக்கச் செய்துவிட்டு வாருங்கள். அதன்பின், சந்தனதாசனது சகல சொத்துக்களையும் அவனிடம் ஒப்புவித்து அவனது மனையில் சேர்த்து வாருங்கள்" என்று ஆஞ்ஞாபித்தனன். சேனாதிபதிகளும் அவ்வாறே செய்தனர்.

அதன் பின், சாணக்கியன், சந்திரகுப்தனையும் இராக்ஷஸனையும் நோக்கி, " இராஜ மந்திரிகளே ! நான் இன்னும் என்ன செய்யவேண்டியதிருக்கிறது ?" என்று கேட்டனன். அதற்குச் சந்திரகுப்தன் ' எனது அரிய குருவே ! மதிவல்ல இராக்ஷஸ மந்திரியை எனக்குச் சிநேகமாக்கி என்னைச் சிம்மாசனத்தில் ஏற்றுவித்தனை. எனது சத்துருக்களான நந்தர்களனைவரையும் கொல்வித்தனை. இதைவிட எனக்கு இன்னும் என்ன வேண்டியிருக்கிறது ? நான் இப்பூமியை நெடுங்காலம் பரிபாலிப்பதற்குத் தங்கள் ஆசீர்வாதமொன்றே வேண்டியதிருக்கிறது ' என்றான்.

சாணக்கியன், "நெடுமாலேயென்ன இந்நிலத்தைப் புரந்து, நீடு இசைபெற்று, நெடுங்காலம் வாழ்வாய்" என ஆசி கூறினன். சந்திரகுப்தன் தலைவணங்கி அவ்வாசியை அகமகிழ்வுடன் பெற்றபின், இராக்ஷஸனுடைய இஷ்டனான சந்தனதாசனை யழைத்து அவனுக்குப் பல கௌரவ பட்டங்களை யளித்து அவனைச் சன்மானித் தனுப்பினன். அதன் பின்பும், சாணக்கியனது தூண்டுதலினால், அரசன் இராக்ஷஸனது பிரியர் எல்லோரையும் வரவழைத்து அவர்கள் தகுதிக்கேற்றவாறு சன்மானஞ் செய்தனன். இதனால் இராக்ஷஸன் மனத் திருப்தி யடைந்து மன்னன்மீது மாறாத பக்திசெலுத்தி வந்தனன்.

இங்ஙனம் சாணக்கியன், பூர்வம் நந்தர்கள் முன்னிலையில் கூறிய சபதப்படி எல்லாம் தனது புத்தி பலத்தினால் நிறைவேற்றியபின், அரசன், அமைச்சன், நகரமாந்தர், அந்தணர் முதலிய பெரியோர் எல்லோரும் புடைசூழ்ந்து அமர்ந்திருக்கும் பேரவையில், அக்கிரபோசனம் தடுக்கப்பட்ட தினத்தன்று அவிழ்ந்த சிகையை அணிபெறக் கோதி, "இன்றே என் சபதம் பூர்த்தியாயிற்று" என்று எல்லோரும் அறியக் கூறி, முடிந்துகொண்டு, தவம் மேற்கொள்ளத் தருக்கள் நெருங்கிய வனத்திற் கேகினன். அப்பொழுது, ஆண்டுள்ளோரெல்லோரும், அவ்வந்தணனின் சபதபூர்த்திக்கு வியந்து, "புத்திமானே பலவான் என்னும் பொன்மொழியும் பொய்யாமோ" என்று கூறிக்கொண்டு தங்கள் தங்கள் இருக்கை போய்ச் சேர்ந்தனர்.

சந்திரகுப்தனும், தரணியிலுள்ளோர் 'தண்ணளியான் செங்கோலான்' என்று தன்னைப் புகழ்ந்து கூறும்படி, புண்ணிய பூமியாகிய இப்பரதகண்டத்தைப் புரந்தரனே யென்னப் புரந்து புகழுடன் வாழ்ந்து வந்தான்.

———

Cambridge Press, Madras.

சென்னை

# டீசர்ஸ் பப்ளிஷிங் ெ



## பிரசுரங்கள்

| | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 1. | *சங்க வாசகம் I | ... | 0 | 2 |
| 2. | * ,, II | ... | 0 | 3 |
| 3. | * ,, III | ... | 0 | 3½ |
| 4. | * ,, IV | ... | 0 | 4½ |
| 5. | * ,, V | ... | 0 | 6 |
| 6. | *அனுபவமுறை பாலபோத கணிதம் II 4-வது வகுப்பிற்கு | ... | 0 | 6 |
| 7. | * ,, ,, III 5-வது வகுப்பிற்கு | ... | 0 | 8 |
| 8 | * ,, (Telugu) | ... | 0 | 8 |
| 9. | *ஆரம்ப கணிதம் I முதல்பாரத்திற்கு | ... | 0 | 12 |
| 10 | * ,, ,, (Telugu) | .. | 0 | 14 |
| 11. | * ,, II இரண்டாம்பாரத்திற்கு. | | 0 | 10 |
| 12 | * ,, .. (Telugu) | ... | 0 | 10 |
| 13. | * ,, III மூன்றாம்பாரத்திற்கு | | 0 | 12 |
| 14 | * ,, ,, (Telugu) | .... | 0 | 12 |
| 15. | *புகழேந்திப் புலவர் | ... | 0 | 10 |
| 16. | *சிறுபொறி பெருந் தீ | ... | 0 | 5 |
| 17. | *நம்பியாண்டார் நம்பி | ... | 0 | 6 |
| 18. | *செய்யுட் கதைகள் | ... | 0 | 12 |
| 19. | *பொறாமைப் பேய் | ... | 0 | 5 |
| 20. | *சிறுவர்க்கான சிறுகதைகள்—முதல் புத்தகம் | | 0 | 3 |
| 21. | * ,, இரண்டாம் புத்தகம் | | 0 | 3 |
| 22. | கற்பின் மகிமை | ... | 0 | 1 |

*இராஜாங்க அங்கீகாரம் பெற்றவை.

குறிப்பு.—இதர கம்பெனி புத்தகங்களும் எம்மிடம் கிடைக்கும்.